தமிழ்ப் படச்சரித்திரத்திலேயே

........ஈடும் எடுப்புமற்ற........

மறுமலர்ச்சிக் கலை ஓவியம்

எங்கும் அறநெறி பரப்பிடும்




இப்பொழுது சென்னை ராஜதானி
முழுவதும் வெற்றிகரமாக
நடைபெறுகிறது




ஜுபிடர் தயாரிப்பு



# அகௌன்டென்ட் தலை வலியால் தாக்கப்பட்டார்



## அதன் காரணத்தை க்ருஷன் ஸால்ட் விளக்கியது

சர்மா ஒரு நல்ல கணக்கர் — அவர் தலை நோயால் கஷ்டப்பட விருக்கும் வரையில் அவர் வேலை செய்யவும் முடியாத அளவுக்கு நோவு மிக மோசமாயிற்று. மானேஜர் அவரது வேகமின்மையைக் குறித்து புகார் செய்தபோது சர்மா தனது நோவின் காரணம்தான் என்பதை விளக்கினார். பின்பு மானேஜர் அவருக்குக் கீழ்க் கண்டவாறு யோசனை சொன்னார்: "காலை உண்டிக்கு முன் தினமும் 'க்ருஷன்' சாப்பிடுங்கள்."

இரண்டே வாரங்களுள் சர்மா புதிய மனிதராகி விட்டார்—தன் வேலையில் ஊக்கம், கவனம் முதலியவைகளுடன், ஆறு மாதங்கள் தலைவலி ஒர் மறைந்த நிலைமைப்போல் உத்தியோக உயர்வும் அதிக சம்பளமும் அடையப் பெற்றார்.

கோளாறு கொண்டுள்ள வயிறே அல்லது வயிற்றில் தங்கிக்கொண்டு ரத்தத்தை நச்சாக்கும் மலங்களினாலேதான் தலைவலி ஏற்படக் காரணமாகும். இவ்விஷத்தை அப்புறப் படுத்துங்கள் — மறுபடி சேரவிடாதீர்கள் — பின் நீங்கள் கவலை கொள்ளவே வேண்டாம். அவ்வாறுதான் 'க்ருஷன் ஸால்ட்' விரைவாகவும் எப்போதும் தலைவலியினின்று காப்பாற்றுகிறது. இவ்வாதம் மற்றும் பல நோய்களை உண்டாக்கும் விஷம்கெடுதியை விளைவிக்கும் அமிலங்கள் இவற்றை அப்புறப் படுத்த 'க்ருஷன்' இயற்கைக்கு உதவுகிறது. இன்றே க்ருஷன் வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ. 1-10 (மஞ்சள் பெட்டியில்.)




## நீங்கள் கூட அந்த க்ருஷன் உணர்ச்சியை அடையலாம்




ஒரு வாரத்திற்கு நாவிதனுக்கு 6 அணா வரையில் செலவு செய்த போதிலும், பல மனிதர்கள் அடிக்கடி இவ்விதத் தோற்றத்தையே அளிக்கிறார்கள். இந்தத்தொகையில் அவர்கள் மூன்று க்ஷவரங்களைப் பெறுகிறார்கள்; ஆகையால், ஏழு நாட்களில் நான்கு நாட்கள் அவர்கள் கட்டைமயிருடன் இருக்கிறார்கள்.



பணம் சரியான
முறையில் மிச்சப்
படுத்தப்பட்டது . . .

தினசரி நீங்கள் 7 ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுவீர்களேயானால், நீங்கள் இத்தகைய சுறுசுறுப்புள்ள தோற்றத்தை அளிப்பீர்கள். தவிரவும், ஒரு ஆறு அணா பாக்கெட் பல வாரங்கள் உபயோகத்தில் வருவதால், பணத்தையும் மிச்சப்படுத்துவீர்கள்.

“7 ஓ'க்ளாக்” பிளேடுகள் உயர்ந்த எஃகினால் மும்முறை சாணை தீட்டப்பெற்றவை. மார்க்கட்டில் அவைகள்தான் மிகவும் கூறுள்ளவை. நம்பிக்கைக்குப் பாத்திரமானவை.

தினந்தோறும் 7' ஓ க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.




குறைந்த செலவில் அதிக க்ஷவரங்களை அளிக்கும் பிளேடுகள்.

5 பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டுக்கு அணா 6

# 9 முதல்



## பக்ஷிராஜாவின்

# பவளக்கொடி



மதறாஸ்

ப்ரபாத்.. ஸன்.. ஸரஸ்வதி

மதுரை ... சிந்தாமணி
கோயம்புத்தூர் - ராஜா, ஷண்முகா
திருச்சி ... வெலிங்டன்
பெங்களூர் - சிவாஜி, ஸுப்மஹால்

| | | |
|---|---|---|
| கும்பகோணம் | ... | டைமண்ட் |
| திருநெல்வேலி | ... | ராயல் |
| காரைக்குடி | ... | ஸரஸ்வதி |
| வேலூர் | ... | தாஜ் |
| காஞ்சீவரம் | ... | ராஜா |
| பாண்டிச்சேரி | ... | நியூ கமர்ஷியல் |
| தென்காசி | ... | பாக்யலக்ஷ்மி |
| புதுக்கோட்டை | ... | வெஸ்ட் |
| கரூர் | ... | டாக்கி டாக் |
| சித்தூர் | ... | பிரேமா |
| மங்களூர் | ... | சென்ட்ரல் |
| கொயிலோன் | ... | லக்ஷ்மி |
| ஆலப்பிழை | ... | சீமாட்டி |
| கோட்டயம் | ... | சென்ட்ரல் |
| கண்ணனூர் | ... | ஜவஹர் |
| கன்னிக்கோட்டை | ... | ராதா |
| பாலக்காடு | ... | நியூ |

மற்றும் இதர முக்கிய நகரங்களில்
விரைவில் திரையிடப்படும்



மஹாலிங்கம்
ராஜகுமாரி
வரதன்
ஸரோஜினி
கிருஷ்ணன்
மதுரம்
குமாரி ராஜம்
லலிதா - பத்மினி



டைரக்ஷன் ஸ்ரீராமுலு நாயுடு. நாராயணன் கம்பெனி வெளியீடு

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 8
இதழ் 37

ஏப்ரல் 10

சர்வதாரி ௵
பங்குனி 28உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

# வண்டிக்காரருக்கு ஒரு வார்த்தை !






மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 37

## என்ன சேதி?

### மகா ராஜஸ்தானம்

இந்தியா தேசத்தில் இருந்த நூற்றுக் கணக்கான சமஸ்தானங்களையும் ஐக்கியப் படுத்தும் விஷயமாகச் சர்தார் செய்த சீரிய தொண்டுக்கு மகா ராஜஸ்தானம் சிகரம்போல் அமைந்திருக்கிறது.

ராஜபுதனத்தைச் சேர்ந்த பதினைந்து புராதன சமஸ்தானங்கள் ஐக்கியம் அடைந்து மகா ராஜஸ்தானமாக உருப் பெற்றிருக்கின்றன. மேற்படி பிரதேசம் ஒன்றேகால் லட்சம் சதுர மைல்களும் ஒன்றரைக் கோடி ஜனத்தொகையும் அடங்கியிருப்பதால் அதற்கு மகா ராஜஸ்தானம் என்று பொருத்தமாகப் பெயரிடப் பட்டிருக்கிறது. ஜெயபுரியைத் தலை நகராகக் கொண்டு அமைந்துள்ள அந்தப் பிரதேசம் பத்து கோடி ரூபாய் வருஷ வருமானம் உள்ளது.

இந்திய சமஸ்தானங்களின் ஐக்கியத்துக்குச் சிகரமாக விளங்கும் மகா ராஜஸ்தானத்தை ஆரம்பித்து வைத்தபோது சர்தார் படேல் கூறிய பொன்மொழிகளைப் பாரத மக்கள் மனதில் பதியவைத்துக் கொள்ள வேண்டும். "அடிமைத் தனத்தை விரட்டுவதற்காக நாம் அன்னியர்களை எதிர்த்துப் போராடினோம். இனி நாம் யாரை எதிர்த்துப் போராடுவது? நம்மிடமுள்ள குறைகளைத்தான் எதிர்த்து விரட்டவேண்டும். அப்படி விரட்டினால் தான் தேசத்தில் சாந்தியும் சுபிட்சமும் ஏற்படும். சுதந்திரத்துக்காக நாம் போராடியபோது சட்டங்களை மீறினோம். சட்டங்களின் மீது நமக்கு மதிப்பு இராமல் போயிற்று. ஆனால், இனியும் நாம் அவ்விதம் இருக்கக் கூடாது. இனி நாம் சட்டங்களையும் சட்டங்களை நிறைவேற்றும் அதிகாரிகளையும் மதித்து நடக்க வேண்டும். இல்லாவிடில் நமது சுதந்திரத்தையும் மன்னர்களிடமிருந்து பெற்ற அதிகாரத்தையும் நாம் காப்பாற்ற முடியாது" என்று சர்தார் புத்திமதி கூறினார்.

### இறைவனின் திருவருள்

பாரதநாடு சுதந்திரம் பெறவும், சுதந்திரம் பெற்றபின் ஏற்பட்ட மகத்தான கோர சம்பவங்களின் விளைவாக நாடு சிதறுண்டு சீர்குலையாமல் இருக்கவும் அருள் புரிந்த கடவுள், சமீபத்தில் ஏற்பட இருந்த ஒரு பெரிய ஆபத்திலிருந்தும் இந்தியாவைக் காப்பாற்றினார். மகாராஜஸ்தானத்தின் ஆரம்பவிழாவை யொட்டி ஜெயபுரிக்குச் சர்தார் பட்டேல் கோஷ்டியினர் சென்று கொண்டிருந்த போது விமானத்தில் பழுது ஏற்பட்டு ஒரு இஞ்ஜின் நின்று விட்டது. அப்படியிருந்தும் விமானி சமயோசித புத்தியுடனும் சாமர்த்தியமாகவும் விமானத்தை நடுவழியில் தென்பட்ட ஓர் ஆற்றின் படுகையில் யாதொரு விபத்துமின்றி இறக்கி விட்டார். தேசத்தின் அருமைப் பொக்கிஷமான சர்தார் பட்டேலைப் பற்றிய எவ்வித செய்தியும் தெரியாததால், சில மணி நேரம் வரையில் தேசம் முழுவதும் கவலைக் கடலில் ஆழ்ந்தது. சர்தாருக்கு எவ்வித விபத்துமில்லை என்று தெரிந்த பின் எல்லோருக்கும் உயிர் வந்தது!

விமான நிலையத்தில் இறங்கும்போது கூட ஏற்படும் அற்பக்கோளாறுகள் விமானங்களுக்கு ஆபத்தாக முடிவது உண்டு. ஓர் இஞ்ஜின் நின்ற பிறகு, அதை மனித சஞ்சார மற்ற நடுவழியில் அற்ப விபத்துமின்றி பத்திரமாக இறக்கிய இந்திய விமானியின் இணையற்ற திறமையைப் பாராட்டுகிறோம். வீர வல்லபாய் பட்டேல் தீர்க்காயுசுடனிருந்து பாரதநாடு பெற்ற சுதந்திரம் என்றென்றும் நிலைத்து இருக்குமாறு செய்வதில் வெற்றி பெற இறைவன் திருவருள் புரிவாராக!

### நடுக்குமா? தூண்டுமா?

ருஷ்யாவிலுள்ள முக்கியத் தொழிற்சாலைகள், மற்ற வல்லரசுகளின் வெடிகுண்டு விமானங்கள் எளிதில் வர முடி

யாத தூரத்துக்கு மாற்றப்பட்டு வருகின்றனவாம். ஏற்கெனவே ஜப்பானிய சர்க்கார் போரைத் தொடங்குவதற்கு முன்பு அமெரிக்காவிலிருந்த தங்களுடைய பாங்கிகளை மூடினார்கள். அதுபோலவே, இப்போது ருஷ்யாவின் மறைமுகமான ஆதிக்கத்திலிருந்து வரும் செக்கோஸ்லவேகியர் அமெரிக்காவிலுள்ள தங்களுடைய பாங்கியை மூடிவிட்டார்கள். இவற்றைத் தவிர, ருஷ்யாவின் இராணுவ முஸ்திபு மும்முரமாக இருந்துவருகிறது. இப்படியெல்லாம் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

இரண்டாவது மகா யுத்தம் முடிந்ததிலிருந்து சர்வதேச நிலைமை நெருக்கடியான கட்டத்துக்கு வந்திருப்பது இது முதல் தடவையல்ல. எனினும் இப்போது உருவாகி வரும் நெருக்கடியை அலட்சியம் செய்வதற்கில்லை. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், கானடா, இத்தாலி, ஹாலந்து, நார்வே உள்படப் பன்னிரண்டு ஐரோப்பிய தேசங்கள் சேர்ந்துகொண்டு அட்லாண்டிக் ஒப்பந்தம் என ஓர் இராணுவ ஒப்பந்தத்தைச் செய்துகொண்டிருக்கின்றன. மேற்படி பன்னிரண்டு தேசங்களுக்குள் எந்த ஒன்றின் மீது பகைவர்கள் படையெடுத்து வந்தாலும் அதற்கு உதவியாக மற்ற தேசங்கள் திரண்டு எழவேண்டும் என்பதே ஒப்பந்தத்தின் சாரமாகும்.

யுத்த நோக்கம் கொண்டுள்ளவர்களை எச்சரித்து யுத்தம் வராமல் தடுப்பதே அட்லாண்டிக் ஒப்பந்தத்தின் நோக்கம் என்று அதில கையெழுத்திட்டுள்ள நாடுகள் கூறுகின்றன. ஆனால், அந்த ஒப்பந்தம் ருஷ்யாவுக்கு எதிராக யுத்தத்தைத் தூண்டும் ஒரு நடவடிக்கை என்றும், ருஷ்யாவை எதிர்த்துப் போர்புரியப் பன்னிரண்டு நாடுகள் தயாராக இருக்கின்றன என்பதையே அந்த ஒப்பந்தம் பறைசாற்றுகிறது என்றும் ருஷ்ய சர்க்கார் கூறுகின்றனர்.

அட்லாண்டிக் ஒப்பந்தத்தின் விளைவாக ஏற்பட்டுள்ள நிலைமை இந்த வருஷத்திலேயே யுத்தத்தைத் தூண்டிவிடக் கூடும் என்று சர்வதேச அரசியல் ஆராய்ச்சியாளர்கள் ஜோஸ்யம் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள்! எனவே, மேற்படி ஒப்பந்தம் யுத்தத்தைத் தடுக்கப் போகிறதா அல்லது தூண்டிவிடப் போகிறதா? அது எப்படியாயினும், அந்த ஒப்பந்தத்துக்கும் இந்தியாவுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையென்றும் உலக தேசங்களின் கட்சிப் பிணக்குகளில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நிற்க இந்தியா உறுதி கொண்டிருக்கிறது என்றும் பாரதநாட்டின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அறிவித்திருப்பது போற்றுதற்குரியது.

# ரெட்டியார் ஆட்சி

ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்களின் சென்னை மாகாண ஆட்சி முடிவடைந்து விட்டது. பிரதம மந்திரி பதவியை இரண்டு வருஷ காலம் சிறப்பாக வகித்த பிறகு அப்பதவியிலிருந்து ஸ்ரீ ரெட்டியார் விலகிக் கொண்டு விட்டார். அவருக்கு மனமார்ந்த வாழ்த்துக்கள் கூறி விடை கொடுத்து அனுப்புகிறோம்.

ஓமந்தூர் ரெட்டியார் ஆட்சிப் பொறுப்பை வகித்த இரண்டு வருஷமும் இந்தியா தேசத்துக்கு மிக முக்கியமான காலம்; சென்னை மாகாணத்துக்கும் முக்கியமான காலந்தான்.

ஸ்ரீ ரெட்டியார் சென்னைப் பிரதம மந்திரியாகிச் சில மாதங்களுக்கெல்லாம் இந்திய தேசபக்தர்களின் நூறு வருஷக் கனவு நனவாயிற்று. 1947-ம் வருஷம் ஆகஸ்டு மீ 15உ இந்தியா தேசம் பூரண சுதந்திரம் அடைந்தது. பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் முதன் முதலாக நிலைபெற்ற சென்னை ஸெண்ட் ஜார்ஜ் கோட்டையில், நூற்றைம்பது வருஷத்துக்கு மேலாக யூனியன் ஜாக் கொடி பறந்து கொண்டிருந்த கொடி மரத்தில்,—இந்திய சுதந்திரக் கொடியைப் பறக்கவிடும் பாக்கியம் ஓமந்தூர் ரெட்டியாருக்குக் கிடைத்தது.

பாரத தேச மக்கள் சகோதர யுத்தத்தில் சர்வநாசம் அடையாதபடி காக்கும் பொருட்டுக் காந்தி மகான் 1948-ம் வருஷம் ஜனவரி மீ 30உ தம் புனித உயிரைப் பலி கொடுத்தார். அந்தப் புண்ணிய புருஷரின் ஆத்மா எழுபத்தொன்பது ஆண்டு தங்கியிருந்த திருமேனியின் துகளை ஏந்திச் சென்று சென்னைக் கடலில் கரைக்கும் உரிமை காந்தி பக்தரான ஓமந்தூர் ரெட்டியாருக்குக் கிடைத்தது.

காந்தி மகான் தலைமையில் தீவிரமான சுதந்திரப் போர் ஆரம்பித்த நாளிலிருந்து இந்தியாவில் பூரண மதுவிலக்குச் செய்ய வேண்டும் என்கிற கிளர்ச்சியையும் நம்முடைய தேசத் தலைவர்கள் நடத்தி வந்தார்கள்.

அந்த மாபெரும் இலட்சியம் சென்னை மாகாணத்திலேதான் முதன் முதலாக நிறைவேறியது. பத்து வருஷத்துக்கு முன் ராஜாஜி சேலத்தில் ஆரம்பித்து வைத்த மதுவிலக்குத் திட்டத்தை ஓமந்தூர் ரெட்டியார் சென்னை மாகாணம் முழுவதிலும் கொண்டுவந்து அமுல் நடத்தி வெற்றி பெற்றார்.

வட கிழக்குப் பருவ கால மழை பொய்த்துவிட்ட காரணத்தினால் இந்தியா தேசத்தின் பல பகுதிகளில் சென்ற இரண்டு வருஷத்திலும் விளைச்சல் குறைவாகப் போய் விட்டது. ஏற்கெனவே பற்றாக்குறை மாகாணமாக இருந்த சென்னை மாகாணம் பெரும் அபாயத்துக்கு உள்ளாயிற்று. ஆட்சி நடத்துகிறவர்கள் கொஞ்சம் அசட்டையாக இருந்திருந்தால் வங்காளப் பஞ்சத்தைப் போன்ற கொடிய பஞ்சம் இந்தச் சென்னை மாகாணத்திலும் ஏற்பட்டிருக்கக் கூடும். தேசபக்த தீரரும் நிர்வாகத் திறமை மிக வாய்ந்தவருமான உணவு மந்திரி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்களுடைய உதவியைக் கொண்டு ஓமந்தூர் ரெட்டியார் சென்னை மாகாணத்தைக் கொடிய பஞ்சத்திலிருந்து காப்பாற்றினார்.

சென்னை மாகாணத்தில் சென்ற இரண்டு வருஷத்தில் என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்களும், மற்றும் பல உழைப்பாளிகளும் போதிய காரணமின்றி அவசரப்பட்டு வேலை நிறுத்தம் செய்தார்கள். அந்த நெருக்கடிகளையெல்லாம் ஓமந்தூர் ரெட்டியார் உறுதியுடன் சமாளித்துப் பொது மக்களுக்கு அதிகத் தொல்லை ஏற்படாதபடி காப்பாற்றினார். அதே சமயத்தில், வேலை நிறுத்தம் செய்த என். ஜி. ஓ. க்களும் பிற தொழிலாளரும் பழி வாங்கப்படாமலும் பார்த்துக் கொண்டார்.

ஓமந்தூர் ரெட்டியாரின் ஆட்சியின் போது தென்னாட்டிலுள்ள இராமேசு



வரம், ஸ்ரீரங்கம், திருப்பதி முதலிய க்ஷேத்திரங்களிலுள்ள பிரசித்தி பெற்ற ஆலயங்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன.

காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் முக்கியமான இடம் பெற்றிருந்த ஜமீன்தாரி முறை ரத்து ஓமந்தூரின் காலத்தில் நிறைவேறியது. ஸ்ரீ கலா வெங்கட்ராவினால் கொண்டுவரப்பட்ட மேற்படி மசோதா பல தடைகளைக் கடந்து சட்டமாகிக் கடைசியில் கவர்னர் ஜெனரலின் அங்கீகாரத்தையும் ஓமந்தூர் ஆட்சியிலேயே பெற்றுவிட்டது.

ஓமந்தூர் ரெட்டியார் தம் ஆட்சியில் சர்க்கார் உத்தியோக வர்க்கங்களில் குடிகொண்டிருந்த லஞ்சம் முதலிய ஊழல்களைப் போக்குவதற்குப் பெரும் பிரயத்தனம் செய்தார்.

ஓமந்தூர் ஆட்சியின் கீழ் சென்னை மாகாணத்தில் ஆஸ்தான கவிகள் ஐந்து பேர் நியமிக்கப்பட்டார்கள்.

ஓமந்தூர் ரெட்டியாரின் காலத்தில் பாரதியாரின் கவிதைகள் தமிழ் மக்களின் பொதுச் சொத்தாயின.

மொத்தத்தில், ஓமந்தூர் ரெட்டியார் பிரதம மந்திரியானபோது யாரும் எதிர்பாராத அளவில் தேச நன்மைக்கு உகந்த காரியங்கள் அவருடைய ஆட்சியின்போது நடைபெற்றிருக்கின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

* * *

ஓமந்தூர் ரெட்டியாரின் ஆட்சியைக் குறை கூறுகிறவர்கள் சிலர், அவர் காங்கிரஸ்வாதி என்ற பெயருடன் இருந்தாலும் இதய அந்தரங்கத்தில் திராவிடக் கட்சி அபிமானம் உடையவர் என்றும், கருப்புச்சட்டைக்காரர்களுக்குச் சலுகை காட்டி வந்தார் என்றும் புகார் சொல்லுவதை நாம் அறிவோம். ஆனால் அது பெரும் அவதூறு என்றும், தவறான குற்றச் சாட்டு என்றும் நாம் உறுதியாக நம்புகிறோம்.

திராவிடக் கட்சிக்காரர் வடநாட்டின் தொடர்பிலிருந்து தென்னாடு விடுபட்டுத் தனிச் சுதந்திர நாடாக வேண்டும் என்று சொல்கிறார்கள்.

ஓமந்தூர் ரெட்டியாரோ இந்தியாவின் ஐக்யத்தில் இணையற்ற நம்பிக்கை படைத்தவர். அகில இந்தியாவின் பொது ஸ்தாபனமான காங்கிரஸில் இடைவிடாத பற்றுக் கொண்டவர். காந்தி மகாத்மாவை அரசியலிலும் பாரமார்த்திகத்திலும் பரம குருவாகக் கொண்டு போற்றுகிறவர்.

திராவிடக் கழகத்தார் ஹிந்தியையும் சம்ஸ்கிருதத்தையும் வெறுப்பவர்கள்.

ஓமந்தூர் ரெட்டியாரோ சமஸ்கிருத பாஷையில் பக்தி கொண்டவர்; ஹிந்தி பாஷையே தேசீய பாஷை என்னும் உறுதியுடையவர்.

கருப்புச் சட்டைக்காரர்கள் கடவுள் இல்லை என்று சொல்கிறவர்கள்; ஹிந்து மதத்தைத் துவேஷிப்பவர்கள்.

ஓமந்தூர் ரெட்டியார் பரம ஆஸ்திக ஹிந்து; தெய்வபக்தியில் திளைத்தவர்; பயபக்தியுடன் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுகிறவர்; ஹிந்து மதத்தின் வெளி சம்பிரதாயங்களில்கூட நம்பிக்கை கொண்டவர்; தவறாமல் தம் நெற்றியில் திருநீறு பூசுகிறவர்.

ஆதலின் ஓமந்தூர் ரெட்டியாரைத் திராவிடக் கட்சிக்காரர் என்றோ கருப்புச் சட்டைக்காரர் என்றோ சொல்லுவது பெரும் அநியாயம்.

திராவிடக் கட்சி—கருப்புச் சட்டைப் பத்திரிகைகள் முதலில் ஓமந்தூர் ரெட்டியார் மீது வரைதுறையின்றி வசை புராணம் தீட்டின; கடைசி நாட்களில் ஓமந்தூராரை ஆதரித்து அவர் உத்தியோகத்தை விட்டுப் போகிறாரே என்று கண்ணீர் வடித்தன.

காங்கிரஸ் கட்சியார் ஓமந்தூராரை அனுப்பிவிடப் போகிறார்கள் என்று அறிந்து திராவிடக் கட்சிப் பத்திரிகைகள் தங்களுடைய கட்சிக்குப் பலங்கூட்டும் நோக்கத்துடன் ஓமந்தூராரை ஆதரித்தன.

அத்தகைய சூழ்ச்சிப் பிரசாரத்தை உண்மை என்று நம்பி ஓமந்தூராரைக் குற்றவாளி ஆக்குவது பெரும் அநீதி.

ஓமந்தூர் ரெட்டியாரைப் பிராமணத் துவேஷி என்று சிலர் கூறியதையும் அறிந்திருக்கிறோம். இதுவும் ஆதாரமற்ற பெரும் பிழையாகும்.

காந்தி பக்தரான ஓமந்தூர் ரெட்டியாரின் உள்ளத்தில் எந்தவித துவேஷத்துக்கும் இடம் கிடையாது.

பிராமணராய்ப் பிறந்த ரமண ரிஷிகளின் படத்தை வைத்துப் பூசனை செய்கிறவரை எப்படிப் பிராமணத் துவேஷி என்று சொல்ல முடியும்?

ரெட்டியாரின் ஆட்சியில் ஏழு பிராமணர்கள் ஹைக்கோர்ட் ஜட்ஜுகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

சர்க்கார் உத்தியோக வர்க்க ஊழல்களை விசாரிப்பதற்காக ஏற்பட்டிருக்கும் நிரந்தரக் கமிஷனின் தலைவர் ஒரு பிராமணர். இவரும் ஓமந்தூர் ரெட்டியாரால் நியமிக்கப்பட்டவர்தான். அப்படியிருக்க, ஓமந்தூர் ரெட்டியாரைப் பிராமணத் துவேஷி என்று சொல்வது எத்தகைய பைத்தியக்காரத்தனம்?

ஓமந்தூர் ரெட்டியார் சலுகைக்கும் சிபார்சுக்கும் இடங் கொடுப்பதில்லை. இயற்கையில் கொஞ்சம் சந்தேகப் பிரகிருதி. இந்தச் சுபாவம் காரணமாகப் பல பிராமணர்கள் பாதிக்கப்பட்டிருக்கலாம்: அதுபோலவே பிராமணரல்லாதாரும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

* * *

ஓமந்தூர் ரெட்டியாரின் ஆட்சி ஏன் முடிவுற்றது? இரண்டு வருஷத்துக்கு முன்னாலும் ஒரு வருஷத்துக்கு முன்னாலும் அவருக்கு வோட்டுக் கொடுத்துப் பிரதம மந்திரியாக்கியவர்கள் இந்த வருஷம் அவரைப் போகச் சொல்லிவிட்டு இன்னொருவரைத் தேர்ந்தெடுத்தது ஏன்?

இதற்குக் காரணம் கண்டுபிடிக்க மூன்று வருஷத்துக்கு முன்னால் போக வேண்டும். சென்னைச் சட்டசபை அமைந்த வரலாற்றையும் அதன் ஆரம்ப கால வரலாற்றையும் நாம் ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டும்.

தென்னாடு பெற்றெடுத்த புத்திரர்களில் உத்தமரும் இணையற்ற அறிவாளியுமான ராஜாஜியைக் காங்கிரஸிலேயே சேர்த்துக்கொள்ளக் கூடாதென்று ஒரு பெருமுயற்சி நடந்தது.

பிறகு அவர் சென்னைச் சட்டசபைக்குள் வராமற் செய்வதற்கு இன்னும் பெரிய பிரமாதமான முயற்சி நடந்தது.

அந்த முயற்சிகளின் முக்கியமான நோக்கம் ஒன்றுதான். ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக வரக்கூடாது என்பதுதான்.

மேற்படி முயற்சிகள் தீவிரமாக நடந்து கொண்டிருந்த சமயத்தில் காந்தி மகான் சென்னைக்கு விஜயம் செய்தார். இங்கே இருந்த சூழ்நிலையைத் தெரிந்து கொண்டார். "சென்னை மாகாணக் காங்கிரஸ் வாதிகளுக்குள் 'கிளிக்'குகள் இருக்கின்றன! இதனால் சென்னையின் நல்ல பெயருக்குக் களங்கம் வருமே!" என்று கூறி மகாத்மா காந்தி வருத்தப்பட்டார்.

காந்தி மகான் எந்தத் தனி மனிதரையும் குறிப்பிட்டுக் குற்றம் சொல்லவில்லை. பொதுப் படையாக சென்னைக் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் உள்ள குறைபாட்டைப் பற்றிச் சொல்லி வருத்தப்பட்டார். ஆயினும் அவ்வாறு மகாத்மா சொன்னதற்காகத் தென்னாட்டில் பலர் அவர்மீது கோபித்துக் கொண்டார்கள். அந்த அவதார புருஷரின் படத்தைச் சிலர் கொளுத்தினார்கள். "வாபஸ் வாங்குக" என்று தந்தி அடித்தார்கள்.

சத்திய சந்தரும் தீர்க்கதரிசியுமான காந்திமகானுடைய வாக்கு எவ்வளவு உண்மையானது என்பது பின்னால் நிகழ்ந்த ஒவ்வொரு முக்கிய சம்பவத்திலும் வெளியாகி வந்தது.

மகாத்மா காந்தி 'கிளிக்' என்று சொன்னதை இன்றைக்கு எல்லாரும் 'குரூப்' என்றும், 'கோஷ்டி' என்றும் சொல்கிறார்கள்.

ஸ்ரீ ரெட்டியார் கடைசியாக விடுத்த வாக்குமூலத்தில் "சட்ட சபையில் உள்ள 'குரூப்' முறை ஒழிந்தாலொழியச் சென்னை மாகாணம் உருப்படாது!" என்று சொல்லியிருக்கிறார்.

மூன்று வருஷத்துக்கு முன்னால் சென்னை மாகாணத்தில் 'கிளிக்' அல்லது 'குரூப்' ஏற்படுவதற்கு ஓமந்தூர் ரெட்டியாரும் உடந்தையாயிருந்தார் என்பதை நாம் துயரத்துடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

அந்தக் குற்றந்தான் அவரை இப்போது பாதிக்கிறது என்று சொல்ல வேண்டும். மற்றப்படி ஸ்ரீ ரெட்டியார் இரண்டு வருஷ நிர்வாகத்தில் செய்த காரியம் எதுவும் இப்போது அவர் போக நேர்ந்ததற்குக் காரணமாகாது.

* * *

காந்தி மகாத்மா குறிப்பிட்ட 'கிளிக்' அல்லது 'குரூப்' முறை சென்னைச் சட்ட சபையில் நேடுகினும்

இருந்து இம் மாகாணத்தின் நிர்வாகத்தைப் பாதித்து வந்திருக்கிறது.

சென்னைச் சட்ட சபை முதன் முதலில் கூடியபோது காங்கிரஸ் மேலோர் ஒரு செய்தி சொல்லி அனுப்பினார்கள். அதாவது "மற்ற எல்லா மாகாணங்களிலும் பழைய பிரதம மந்திரியே தேர்ந்தெடுக்கப்படுவது போலச் சென்னையிலும் பழைய பிரதமர் ராஜாஜியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி அனுப்பினார்கள்.

காங்கிரஸ் மேலோரின் ஆலோசனையைச் சென்னைச் சட்ட சபை அங்கத்தினர் புறக்கணித்தார்கள்.

"ராஜாஜி வேண்டாம்" என்பதிலே தான் பெரும்பாலோர் ஒற்றுமை காட்டினார்களே தவிர, அப்புறம் ஒவ்வொரு காரியத்திலும் கோஷ்டி மனப்பான்மையைக் காட்டி வந்தார்கள்.

முதலில் நடந்த தலைவர் தேர்தலில் ஸ்ரீ டி. பிரகாசமும் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியாரும் போட்டியிட்டதில் ஸ்ரீ பிரகாசம் வெற்றி பெற்றார்.

அடுத்தாற்போல் நடந்த சட்டசபைச் சபாநாயகர் தேர்தலில், பிரதம மந்திரி பிரகாசம் நிறுத்தி வைத்த அபேட்சகர் படு தோல்வி யடைந்தார்.

அடுத்த வருஷத் தலைவர் தேர்தலில் ஸ்ரீ பிரகாசம் தோல்வி யடைந்தார்; ஓமந்தூர் ரெட்டியார் பிரதமர் ஆனார்.

மீண்டும் சென்ற வருஷத் தேர்தலில் போட்டி நடந்தது. அதில் கோஷ்டி மனப்பான்மை மேலும் வளர்ந்திருக்கிறதென்று வெளியாயிற்று. எனினும் ஓமந்தூர் வெற்றி பெற்றார்.

அந்த வெற்றிக்குப் பிறகு கோஷ்டி துவேஷமும் சச்சரவும் மனக்கசப்பும் அளவில்லாமல் வளர்ந்து வந்தன.

கடைசியாக, ஓமந்தூர் ரெட்டியாரைச் சென்ற வருஷம் ஆதரித்தவர்களே இப்போது அவரை விலகிக் கொள்ளச் சொல்லும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது.

சென்னைச் சட்ட சபையிலுள்ள 'குரூப்' அல்லது 'கோஷ்டி'ப் பிரிவினை தேச நன்மையையோ பொது நல வேலைத் திட்டத்தையோ காரணமாகக் கொண்டு ஏற்படவில்லை. ஏனெனில் எல்லாரும் தேசபக்தர்கள்; எல்லாரும் காங்கிரஸ்காரர்கள். காங்கிரஸ் மகா சபையும் காங்கிரஸ் மேலோரும் நிர்ணயிக்கும் வேலைத் திட்டங்களைச் சக்தியானுசாரம் நடத்தக் கடமைப்பட்டவர்கள்.

ஆகவே, 'குரூப்' அல்லது 'கோஷ்டி' ஏற்பட்டு வளர்ந்திருப்பதற்குக் காரணம் சட்டசபை அங்கத்தினரின் உத்தியோகப் பற்றேயாகும். யார் மந்திரி உத்தியோகம் பார்ப்பது என்பதைப் பொறுத்தே கோஷ்டிப் பிரிவினையும் சச்சரவும் ஏற்பட்டிருக்கின்றன.

சென்னை மாகாணத்தின் நற்பெயரையும் சென்னை மாகாண மக்களின் நன்மையையும் முன்னிட்டு மேற்கூறிய நிலைமை மாறவேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். சென்னைச் சட்டசபைகளின் அங்கத்தினர்கள் பதவிப் பற்றையும் கோஷ்டி மனப்பான்மையையும் கைவிட்டு நாட்டின் நலத்தையே பிரதானமாகக் கருத வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.

* * *

எவ்வளவோ இக்கட்டான நிலைமையில் இரண்டு வருஷ காலம் பிரதம மந்திரி பதவி வகித்துப் பல அரும் பெரும் காரியங்களைச் செய்து விட்டுப் பதவியிலிருந்து விலகும் ஓமந்தூர் ரெட்டியாருக்கு மனமார்ந்த நன்றி கூறி விடை கொடுக்கிறோம்.

ஓமந்தூர் ரெட்டியார் பிரதம மந்திரி பதவியை விட்டு நீங்கியதால், தேசத் தொண்டு செய்வதற்கு அவருடைய சக்தி குறைந்து போய்விட்டதாக நாம் நினைக்கவில்லை. அவருடைய சக்தி அதிகமாகி யிருக்கலாம் என்று கருதவும் காரணம் உண்டு.

சென்னைச் சட்டசபையில் உள்ள காங்கிரஸ் கட்சியில் 'குரூப்'புகளையும் கோஷ்டிகளையும் ஒழிப்பதற்கு அவர் பெருமுயற்சி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீ ரெட்டியாரின் விருப்பத்தின் படியே கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா பிரதமராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதாகத் தெரிய வருகிறது.

எனவே புதிய மந்திரி சபையுடன் பூரணமாக ஒத்துழைத்தும் யோசனைகள் சொல்லியும் நல்ல முறையில் சென்னை மாகாண அரசாங்க நிர்வாகம் நடை பெறுவதற்கு ஸ்ரீ ரெட்டியார் உதவி புரிய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறோம்.

அத்தகைய பெருந்தன்மையான காரியத்தை ஸ்ரீ ரெட்டியாரிடம் எதிர் பார்ப்பதற்கு நமக்குப் பூரண உரிமை உண்டு என்று நம்புகிறோம்.



# திரையிடத்தயார்!





முருகன் டாக்கீஸாரின்

# ரத்னகுமார்

P.U.சின்னப்பா · P.பானுமதி · D.பாலசுப்ரமண்யம்
M.G.ராமசந்திரன் · K.P.கேசவன் M.K.மீனலோசனி
N.S.கிருஷ்ணன் · T.A.மதுரம் நடித்தது

டைரக்ஷன்: கிருஷ்ணன் பஞ்சு ஸ்டூடியோ: நியூடோன்...

டிஸ்டிரிப்யூட்டர்ஸ்: முருகன் டாக்கி கம்பெனி..
மதுரை.....பெங்களூர் சிடி.....பெஜவாடா...



# How'd you like being on the Sea-beach!



ஆயாஸமாக இருக்கிறதா? ஆம்...... உக்கிரமான கோடை வெயில் உடம்பை பலஹீனப் படுத்துகிறது. அதிர்ஷ்டவசமாக கோடைக் களைப்பைப் போக்கி உதவ E. W. I. **போனிக்ஸ் மின்சார விசிறிகள்** இருக்கின்றன. அவைகள் மிகவும் வலுவாக அமைக்கப்பட்டவை. இந்திய சர்க்காரின் அலிபூர் பரிசோதனை சாலையாரால் பரீக்ஷை செய்யப்பட்டு அத்தாக்ஷி பெற்றவை. சிறந்த நீடித்த உழைப்புக்குப் பிரக்யாதி வாய்ந்தது E. W. I. மின்சார விசிறிகள்தான் என்று நீங்கள் திடமாக நம்பலாம்.

1949 MODEL




## PHŒNIX Fans

GOVT. TESTED

AC/DC

FAS 440

Sole Distributors for Madras Presidency inclusive of all States:

**R M. S. & CO. LTD., 16, BROADWAY, MADRAS.1.**

கோவை ஜில்லாவுக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

மெஸர்ஸ். ஷண்முகம் & கோ.

5/106, ஜெயில் ரோடு :: கோயமுத்தூர்

வட ஆற்காடு தென் ஆற்காடு ஜில்லாக்களுக்கு
டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

மெஸர்ஸ். குட்மேன் & கோ.

டுப்ளே தெரு :: புதுவை

அட்டைப்பட விளக்கம்

# கிழங்கோ, கிழங்கு!

**கொ**ஞ்ச நாட்களுக்கு முன் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு தாம் கோதுமை மாவையும் சர்க்கரை வள்ளிக் கிழங்கையும் சேர்த்து ரொட்டி தட்டிச் சாப்பிடுவதாகக் கூறினர். நாட்டில் ஏற்பட்டிருக்கும் அரிசிப் பஞ்சத்தை முன்னிட்டுத் தேச மக்கள் தம்மைப் போலவே அரிசி ஆகாரத்தைக் குறைத்துக் கொண்டு, கிழங்கு வகைகளை அதிகமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

தமிழர்களின் உணவில் கிழங்கு வகைகள் ஏராளமாக உண்டு. வள்ளிக்கிழங்கு, கருணைக் கிழங்கு, சேப்பங் கிழங்கு, பனங் கிழங்கு, சிறு கிழங்கு, கொட்டிக் கிழங்கு என்று எத்தனையோ விதக் கிழங்குகளைப் பக்குவம் பண்ணித் தமிழர்கள் சாப்பிடுவார்கள். அதுமட்டுமல்ல; நம் கவிஞர்கள் கிழங்குகளை வைத்து அருமையான பாடல்களும் பாடியிருக்கிறார்கள்.

ஆயிரம் வருஷத்துக்கு முன் கவிச் சக்கரவர்த்தி கம்பர் ஒருநாள் நல்ல உச்சி வேளையில் ஒரு கிராமத்தை அடைந்தார். பசியும் களைப்பும் மேலிட்டிருந்தது. தெருவோரமாக இருந்த ஒரு மண்டபத்தை அடைந்தார். தமக்குத் தெரிந்தவர்கள் அந்த ஊரில் யாராகிலும் உண்டா என்று யோசித்தார். அந்தச் சமயம் "கிழங்கோ, கிழங்கு!" என்று ஒரு குரல் கேட்டது. குரல் கேட்ட திசையைத் திரும்பிப் பார்த்தார். ஒரு இள நங்கை தலையில் கொட்டிக் கிழங்குக் கூடையைச் சுமந்து வந்து கொண்டிருந்தாள்.

அவள் 'கிழங்கோ, கிழங்கு!' என்று கூறிய குரலைக் கேட்டதுமே கம்பருக்குப் பாதிப் பசி தீர்ந்துவிட்டது. அந்தப் படைபடைக்கும் வெய்யிலில் அவள் கிழங்குக் கூடையைச் சுமந்து தள்ளாடி நடப்பதைப் பார்த்து இரக்கம் ஏற்பட்டது. உடனே ஒரு அருமையான பாடல் பிறந்தது.

இந்தப் பெண் பூமியில் கால்வைத்து நடந்தால் கல்லும் முள்ளும் குத்திப் பாதங்கள் நோகுமே! அவள் பாதங்கள் பூமியில் படத் தகுதி வாய்ந்தன அல்லவே! மிகவும் மென்மை பொருந்திய பாதங்கள் அல்லவா?

இட்ட பாதத்தை எடுத்து வைத்தால் அந்த வெய்யில் வேளையின் சூடு தாங்காது கொப்பளங்கள் உண்டாகி விடுமே! அதைக் கொஞ்சமும் பொருட் படுத்தாமல்

இட்ட அடி நோவ
எடுத்த அடி கொப்பளிக்க

அவள் நடந்து வருகிறாள் அல்லவா?

தலையில் கொட்டிக் கிழங்குக் கூடை வேறு சுமந்து கொண்டல்லவா நடக்கிறாள்! கொட்டிக் கிழங்கின் பாரம் தாங்கமாட்டாது அவளுடைய இடை ஒடிந்து விழுந்து விடும் போல் அசைகிறதே!

வட்டில் சுமந்து
மருங்கசைய

அவள் வருகிறாள். இடை ஒடியும் போலத் துவளுவதைப் பொருட்படுத்தாமல், 'கிழங்கோ, கிழங்கு!' என்று கூவுகிறாள்.

அவள் நாவிலிருந்து எழும் அந்த ஓசைக்கு என்ன கொடுப்பது?

இட்ட அடி நோவ
எடுத்த அடி கொப்பளிக்க
வட்டில் சுமந்து
மருங்கசையக்—கொட்டிக்
கிழங்கோ கிழங்கென்று
கூறுவாள் நாவில்
வழங்கோசை வையம்
பெறும்!

பசி தீர வழியுண்டு என்று நம்பிக்கை ஊட்டிய 'கிழங்கோ, கிழங்கு!' என்ற குரலுக்கு, ஓசைக்கு - இந்த உலகத்தையெல்லாமே கொடுக்கலாம் என்கிறார் கவிஞர். அற்புதமான ஒரு மனோபாவத்தைக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் கன்னித் தமிழில் ஆயிரம் வருஷத்துக்கு முன் பாடியிருக்கிறார்.

இட்ட அடி நோவ
எடுத்த அடி கொப்பளிக்க
வட்டில் சுமந்து
மருங்கசைய

அந்தக் கன்னி நடந்து வரும் காட்சியைக் கண்டு கவிச்சக்கரவர்த்தி கம்பர் வியந்து நிற்பதுபோல் நமது சித்திரக்காரர் வரைந்திருக்கிறார். அந்தக் காட்சிதான் இந்த இதழின் மேலட்டையை அலங்கரிக்கிறது.

# வட்ட மேஜை

## ★ சென்னை சிரிக்கப்பட்டது!

நமது சென்னை மாகாணத்தைப் பிடித்த பீடை இன்னும் விட்ட பாடாகக் காணோம். நீதிக்கும் நிர்வாகத்திற்கும் பெயர்பெற்ற ராஜாஜியை என்றைக்கு வேண்டாமென்று நிராகரித்தார்களோ, அன்றே நமது சென்னை மாகாணத்தைக் கோஷ்டி சனியனும், பதவிப் பித்தும் பிடித்துக் கொண்டது. கோஷ்டி கோஷ்டியாகக் கூடிக்கொண்டு கும்மாள மடிக்கிறார்கள் நமது எம். எல். ஏ.க்கள்.

அஹிம்சையின் பெயரால், தியாகத்தின் பெயரால், ஒப்பற்ற தியாகமணிகளின் பெயரால் பதவிக்கு வந்த நமது அரும்பெரும் எம். எல். ஏ.க்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கே இழிவு உண்டாக்கி விட்டனர். பொது ஜனங்களிடம் அவர்களுடைய செல்வாக்கும் குறைந்துவிட்டது.

பிரகாசம் கோஷ்டி, சுப்பராயன் கோஷ்டி, காமராஜ் கோஷ்டி, காளா கோஷ்டி, மேனன் கோஷ்டி என்று பலவாறு பிரிந்துபோக, தனித்து நின்ற உபரி கோஷ்டிகளைச் சேர்த்து ஒரு கோஷ்டியையும் ஏற்படுத்திக் கொண்டனர். காந்திபக்தர், தர்மசீலர், நிர்வாகத்தில் பெயர்பெற்ற நமது ரெட்டியார் தேர்தலிலிருந்து வாபஸ் பெற்றுத் தம்முடைய கௌரவத்தை உயர்த்திக் கொண்டார். பொதுஜனங்களிடம் அமோகச் செல்வாக்கு பெற்ற நமது ரெட்டியார் சென்ற மாதம் 28ல நடந்த கட்சிக் கூட்டத்தில் பேசியதை ஒவ்வொரு எம். எல். ஏ.யும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமக்குள் ஐக்கியம் வேண்டும். கோஷ்டி மனப்பான்மை வேண்டாம். யார் ஜெயிப்பது என்பது தற்போது பிரச்னை அல்ல என்று ரெட்டியார் வெகு அழகாகப் பேசி யிருக்கிறார். கோஷ்டிக்குள் கோஷ்டி சேர்த்து மற்ற உபரி கோஷ்டியைக் காலை வாரி விடும் இந்த எம். எல். ஏ.க்கள் அடுத்த தேர்தலில் சட்டசபைக் கட்டிடத்தை எட்டிப் பார்க்க முடியுமா? நமது அருந்தவக் கவி பாரதியார் சொன்னதுபோல் ''எல்லாரும் இந்நாட்டு மன்னர்'' என்று ஒவ்வொரு எம். எல். ஏ.யும் ஒவ்வொரு மாதம் பிரதம மந்திரி பதவி பார்ப்பது என்று தீர்மானித்து விட்டார்களேயானால், சகல மெம்பர்களுக்கும் மனம் திருப்தி அடைந்து விடும்! சிரிக்கட்டும் சிரிக்கட்டும்! சென்னையைப் பார்த்து உலகம் சிரிக்கட்டும். ராஜாஜி இல்லாத மந்திரிசபை என்று பார்த்துச் சிரிக்கட்டும். அந்தச் சிரிப்பு நாற்புறமும் கேட்கட்டும். இரும்பு மனிதர் படேலின் காதைத் துளைக்கட்டும்!

அத்திபட்டி
31—3—49. அ. பெ. சுந்தரபாண்டியன்

○●○

## தமிழகத்தின் ஆஸ்தான கவி

தமிழகத்தின் ஆஸ்தான கவி என்னும் உன்னத பதவியை நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளைக்கு அளித்து, தமிழகத்துக்கு ஒரு தனி மதிப்பைக் கொடுத்ததற்காக சென்னை அரசாங்கத்தாரைப் பாராட்ட வேண்டும். சேர, சோழ, பாண்டியர் போன்ற பல மன்னர்கள் அரசாட்சி செய்துவந்த பண்டைக் காலத்தில் பாவலரும், நாவலரும், சங்கீத வித்துவான்களும் அரச அவையை அணி பெறச் செய்தனர். சுதந்திர இந்தியாவில், தமிழகமும் தன்னரசு செய்யத் தொடங்கிய இந்தக் காலத்தில் நாமக்கல் கவிஞர் அவர்களே ஆஸ்தான கவியாகத் தமிழகத்தைச் சிறப்பிக்கப் போகின்றார் அமிழ்தினு மினிய நம் தமிழ் மொழியும் தலைசிறந்து விளங்கப் போகின்றது என்று பெருமை கொள்வோம். அத்தகைய கவிஞரைப் புகழ்ந்து போற்றுவது தமிழ் மக்களது கடமை. ஒரு நாட்டின் பெருமை அங்கு சிறப்புற்று விளங்கும் மொழி, கலை, நாகரிகம் முதலிய பண்பாடுகளிலே தான் இருக்கிறது. ஆகவே நாமக்கல் கவிஞரை—பலரும் புகழ்ந்து போற்றும் காந்தியக் கவிஞரை — ஆஸ்தான கவியாக நியமித்த சென்னை அரசாங்கத்தாருக்குத் தமிழ் மக்களின் பாராட்டு உரியதாகும்.

கொழும்பு
28—3—49 எஸ். அநவரத விநாயகமூர்த்தி

○●○

## ★ மானம் போகிறதே!

நான்கு தேர்தல்களில் மூன்று புதிய தலைவர்கள்! அப்பப்பா! என்னவென்று கூறுவது, நம்முடைய 'எம். எல். ஏ' மகானுபாவர்களின் தன்மையை! முதல் வருடத் தலைவர் இரண்டாவது வருடத்துக்குள் நம்முடைய எம்.எல்.ஏ.க்களுக்கு வேப்பங்காயாக மாறி விட்டார். போன வருடம் வேண்டியிருந்த தலைவரை இந்த வருடம் வீட்டுக்குத் திருப்பி அனுப்பி யாகிவிட்டது. இந்த வருடத் தலைவராவது, அடுத்த பொதுத்தேர்தல் நடக்கும் வரை நீடித்து இருப்பாரா? அல்லது அவருக்கும் அடுத்த ஆண்டு இதே கதிதானா? யார் கண்டது நமது அபூர்வ எம். எல். ஏ.க்களின் மனோதத்துவ ரகசியத்தை!

மேலிடத்தோர் வலியவந்து புத்திமதி சொல்லியபோது, அவர்களுடைய புத்திமதிகளைத் தட்டிக் கழித்து, அவர்களை அவமானப்படுத்திய நம் மாகாண குட்டித்தலைவர்கள் இந்த வருடமும் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்தபோது புத்தி சொல்லிவிட்டுப் போன வீரவல்லபரின் பொன்மொழிகளைக் காற்று வாக்கில் விட்டுவிட்டனர். தேர்தல் கூத்து நடத்தி, மாகாணத்தின் கௌரவத்தை மேலும் அதல பாதாளத்திற்குத் தள்ளிப் பாழ்படுத்தி விட்டனர். போதாக்குறைக்குப் புது மந்திரி சபை அமைப்பதில் மேலிடத்தோரின் யோசனையைக் கேட்க டில்லிக்குப் போயிருக்கிறார்களாம்.

மேலிடத்தோர்கள் டில்லியில் பாய்போட்டுக் கொண்டு தூங்கவில்லை. நாட்டின் நலனைப் பாதுகாப்பதில் அவர்கள் ஒவ்வொரு நிமிஷமும் உயிரைவிட்டு வேலைசெய்து வருகிறார்கள். அவர்களுடைய அருமையான நேரத்தைப் பாழ்படுத்த வேண்டாம். புதுமந்திரி சபை அமைப்பையும் நம் மாகாண மேதாவிகளே நிர்ணயித்துக் கொள்ளட்டும். புதுப் புதுத் தலைவர்களைத் தேர்ந்து எடுக்

ஆற்றல் பெற்ற எம். எல். ஏ.க்களுக்குப் புது மந்திரிமார்களைப் பொறுக்குவது கஷ்டமா?

''மந்திரி சபை விழுவதோ அல்லது கட்சிகளின் பலப் பரீட்சையில் குழப்பம் ஏற்படுவதோ இந்த மாகாணத்தின் நன்மைக்கு ஏற்றதல்ல. இப்போது ஏற்பட்டிருக்கும் மந்திரி சபைப் புகைச்சல் புகைச்சலோடு போகவேண்டுமென்றும் நெருப்பு மூளக்கூடாது என்றும் விரும்புகிறோம்''—என்று ''புகையும் நெருப்பும்'' என்ற தலைப்பில் 17-10-48 கல்கி இதழில் வெளியிடப்பட்ட விருப்பம் நிறைவேறவில்லை. புகைச்சல் முற்றி நெருப்பு மூண்டு ஓமந்தூரார் மந்திரி சபைக்கு உலை வைத்தாகிவிட்டது. மாகாணத்தின் கௌரவத்துக்கும் உலை வைத்தாகி விட்டது.

இந்தப் பாழ்நெருப்பு இனியாவது அணைந்துவிடுமா? அடுத்த ஆண்டு மூளாமல் இருக்குமா? அல்லது ஆண்டு தோறும் மூண்டு மூண்டு நம் சென்னை மாகாணத்தின் கௌரவத்தையும் மானத்தையும் பாழ்படுத்திக் கொண்டே இருக்குமா?

கடவுளே! சென்னை மாகாணத்தின் மானம் பறிபோகிறதே!

சென்னை
2—4—49 மதுராம்பாள்

○●○

## மாறுதலின் நோக்கம் என்ன?

சென்னைச் சட்டசபைத் தலைவர் தேர்தல்—அதாவது பிரதம மந்திரி போட்டி முடிந்துவிட்டது. பழைய தலைவரை விடப் புதிய தலைவர் எந்த விதத்தில் மேலானவர் என்பது பொதுமக்களுக்கு விளங்கவில்லை. ஒருவேளை பார்லிமெண்டரி வேலை அனுபவத்திலோ, எதிர்க்கட்சிக்குச் சுடச்சுடப் பதில் கொடுக்கும் சாமர்த்தியத்திலோ ஒரு சிறந்த நிர்வாகத் தலைவரைப் பொறுக்கி இருந்தால் மாறுதலுக்கு அர்த்தம் இருக்கலாம்.

ரெட்டியாரை ராஜிநாமா செய்யும்படி வற்புறுத்தவும், சுப்பராயனை எதிர்த்து ராஜாவைத் தேர்ந்தெடுக்கவும் கூடிய ஒரு சூழ்நிலை இந்த மாகாண அரசியல் பார்லிமெண்டரி வேலையில் தொடர்ந்து வேலை செய்து வருவது இனியும் இம்மாகாணத்துக்கு நல்லதில்லை. இந்தப் போட்டியினால் இன்னும் ஆறு மாதத்திலோ ஒரு வருடத்திலோ வேறு ஒரு பிரதம மந்திரி வந்தாலும் அதைப் பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. இம்மாகாணத்தில் மந்திரி மாறுதல் என்னும் சூதாட்டம்தான் ஒழுங்காக நடைபெறுமே யல்லாது, பிறமாகாணங்களைப் போல மக்களுக்குச் சேவை செய்ய இப்போது இருக்கும் சட்டசபைகளினால் இயலாது என்பது தெளிவு.

ஆகவே, இருவித கோரிக்கைகளை மத்திய சர்க்கார் கவனிக்க வேண்டும். இம்மாகாணத்துக் கோடிக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளான பொது மக்களின் நலத்தில் அக்கறை கொண்டு கவனிக்க வேண்டும்.

ஒன்று இம்மாகாண சட்டசபைகளை உடனே கலைத்து விட்டு, மறு தேர்தல் நடத்த ஒரு உத்தரவு பிறப்பிக்க வேண்டும்.

அல்லது இரண்டாவது, சட்டசபை அங்கத்தினர்களுக்கு மாதச்சம்பளம் கொடுத்து தூங்கச் சொல்லி விட்டு ஐந்து பேரடங்கிய ஒரு அட்வைஸரி கமிட்டி நியமித்து, தேர்தல் வரும்வரை மாகாண ஆட்சியை நடத்தி வர வேண்டும்.

விட்டலர்புரம் எம். ஆர். மேகநாதன்
1—4—49 வி. எஸ். வெங்கடாச்சாரி



''என்னங்க! விரோதி நெருங்கு கிறாப் போல இருக்குதே!''
''ஐயையோ! வந்துட்டானா அவன்? நான் எங்கேயாவது ஓடிப்போய் ஒளிந்து கொள்ளுகிறேன்!''

''என்னங்க இது! நான் விரோதி வருஷம் நெருங்குகிறதைச் சொன்னால் நீங்கள் உங்கள் விரோதியை நினைச்சுக்கிட்டு பயந்து ஓடிவந்து விட்டீங்களே!''

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'சென்னை சிரிக்கப்பட்டது' என்ற கடிதம் எழுதிய அந்திபட்டி அ. பெ. சுந்தரபாண்டியனுக்கும், 'மானம் போகிறதே' என்ற கடிதம் எழுதிய சென்னை மதுராம்பாளுக்கும் பங்கிட்டு அளிக்கப்பட்டது.

# சில்லறை விஷயங்கள்

சென்னை மாகாணத்தில் ஒரு மகாராஜா கவர்னராக இருக்கிறார். ஒரு ராஜா பிரதம மந்திரியாகி விட்டார். நல்ல பொருத்தம் தான்! ஆனால் ஒரு தொந்திரவு.

ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜா பிரதம மந்திரியாகிவிட்டார் என்ற செய்தியைக் கேட்டுச் சிலர் சரியாகப் புரிந்துகொள்ளாமல், செட்டி நாட்டுக் குமாரராஜாவுக்கு வாழ்த்துத் தந்தி கொடுத்ததாகக் கேள்வி!

வித்தியாசம் கொஞ்சந்தானே!

• • •

மூன்றாம் வகுப்பு வண்டிகளில் மின்சார விசிறி வைக்கப் போவதாக ஒரு திடுக்கிடத் தக்க செய்தி வந்திருக்கிறது.

அப்பாடா! இதைக் கேள்விப்பட்டதும் குளு குளு வென்று காற்றடிப்பது போல அல்லவா இருக்கிறது!

ஆனால், ஒரு சந்தேகம்: மின்சார விசிறியை மூன்றாம் வகுப்பு வண்டியில் எங்கே வைப்பார்கள்? இடம் எங்கே இருக்கிறது? அப்படியே விசிறியை வைத்தாலும் காற்றுப் புகுவதற்கு இடம் இருக்கிறதா?

• • •

இதுவரை ருஷ்ய வெளிநாட்டு மந்திரிப் பதவியை வகித்துவந்த மொலடாவ் அந்தப் பதவியிலிருந்து விலகிவிட்டார். அவருக்குப் பதிலாக ஆண்ட்ரு விஷின்ஸ்கி அந்தப் பதவிக்கு நியமிக்கப்பட்டிருக்கிறார்.

இது ஐரோப்பிய அமெரிக்க ராஜதந்திரிகளை ஒரு கலக்குக் கலக்கி யிருக்கிறது.

ருஷ்ய வெளிநாட்டுக் கொள்கையில் மாறுதல் ஏற்படும் என்று சில ஐரோப்பிய ராஜதந்திரிகள் நினைக்கிறார்கள்.

மாறுதல் ஏற்படுமா? அப்படியானால் அந்த மாறுதல் எப்படி யிருக்கும்? மொலடாவையும் விஷின்ஸ்கியையுமே கேட்டுப் பார்க்கலாம்.

"காம்ரேட் மொலடாவ்! சௌக்கியமா?"

"முடியாது!"

"அடாடா! நான் ஐக்கிய தேச மகா சபையைச் சேர்ந்தவன் அல்ல, ஸார்!"

"நீர் யாராக இருந்தாலும் என்ன?— முடியாது!"

"நல்லது, வந்தனம்! போய்வரட்டுமா?"

"முடியாது!"

அடுத்தாற்போல் விஷின்ஸ்கியைச் சிறிது விசாரிக்கலாம்.

"காம்ரேட் விஷின்ஸ்கி, சௌக்கியமா?"

பதிலே இல்லை.

"காம்ரேட் விஷின்ஸ்கி, உம்மைத்தான் ஐயா, சௌக்கியமா?"

மீண்டும் மௌனம்.

"தோழரே, ருஷ்ய வெளிநாட்டுக் கொள்கையில் ஏதாவது மாறுதல் ஏற்படுமா?"

கப்சிப்!

"சரி, நான் போய்வரட்டுமா?"

"முடியவே முடியாது!"

• • •

தமிழ் நாட்டு ஆஸ்தான கவியாக நியமிக்கப்பட்டிருக்கும் நாமக்கல் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளைக்கும் கோனநாட்டு ஆஸ்தான கவியாக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ வன்னத் தோலுக்கும் ஒரு விசேஷ ஒற்றுமை உண்டு.

1943ம் வருஷம் திருச்சி பொன்மலையில் நடந்த ஒரு மகாநாட்டுக்கு ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளையும் கோனக் கவி வன்னத்தோலும் போயிருந்தார்களாம். அப்போது ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை கவி வன்னத்தோலைப்பற்றிக் கூறியதாவது:— "ஸ்ரீ வன்னத் தோல் என்னைவிடப் பெரிய கவிஞர். எனக்கு ஒரு காதுதான் கேட்காது. அவருக்கு இரண்டு காதும் அடியோடு செவிடு!"

மலரைப் போல்
மிருதுவாகவும் ...

கவர்ச்சிகரமான
நிறங்களில் ...

விதம் விதமான
அமைப்புகளுடன் ...

ஒப்புயர்வற்ற உன்னத
ஆடையாக விளங்கும் ...

மனோரம்மியமான
பட்டுப் புடவைகள்



தயாரிப்பவர்கள்: **டி.வி.ஜி.ஆர்.எம்.கே.** லிட்.,
**பட்டு நெசவு மில்ஸ், சிதம்பரம்**

தூய வெண்மை நிற ஷர்ட்டிங் துணிகள்
நேர்த்தியான கோடுகள் இழைத்த ஷர்ட்டிங்குகள்
ரம்மியமான ஜாக்கட் துணிகள் முதலியன
வேண்டிய அகலத்தில் கிடைக்கும். தேவைக்கு
விண்ணப்பிக்கவும்

# அலை ஓசை

கல்கி

## ஏழாம் அத்தியாயம்

## நித்திய வாழ்வு

இந்த உலகத்தில் எத்தனையோ தேசங்கள் சில சமயம் சிறப்புடன் வாழ்வதும் பிறகு அழிந்து போவதும் வழக்கமா யிருக்கையில், பாரததேசம் மட்டும் பல்லாயிரம் வருஷமாக நித்திய வாழ்வு பெற்றிருப்பதின் காரணம் என்ன என்பது பற்றிக் கிட்டாவய்யர் சீதாவிடம் கூறினார் அல்லவா?

அவருடைய புதல்வன் சூரியநாராயணன் சற்று நேரத்துக்கெல்லாம் அதற்கு வேறொரு காரணம் கூறினான். கிட்டாவய்யர் வீட்டுத் திண்ணையில் கூடிய பார்லிமெண்டு சபையில் நடந்த விவாதத்தின்போது சூரியா அந்தக் காரணத்தைச் சொன்னான்.

“கொஞ்சம் இதைக் கேளுங்கள்: ஒரு குண்டூசியில் வரிசையாகத் தபால் தலைகளைக் குத்திக் கோப்பதாக வைத்துக் கொள்ளலாம். அதில் மேலே யுள்ள ஒரே ஒரு தபால் தலையின் பருமன் எவ்வளவோ அவ்வளவுதான் இந்த உலகத்தில் மனிதன் தோன்றி நாகரிகம் அடையத் தொடங்கிய பிறகு சென்றிருக்கும் காலம். அதற்கு முன்னால், கீழேயுள்ள அவ்வளவு தபால் தலைகளின் அளவுள்ள காலம் இந்த உலகம் உற்பத்தியாகி மனிதனைத் தவிர மற்ற பல்வேறு ஜீவராசிகள் வாழ்ந்து வந்தன. அந்த ஜீவராசிகளிலே தென்னைமர உயரமும் மதுரைக் கோவில் கோபுரத்தின் நீளமும் உள்ள சில பிராணிகள் இருந்தன. சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் அந்தப் பயங்கரமான பிராணிகள் இந்த உலகத்தில் அங்குமிங்கும் அகப்பட்டதையெல்லாம் விழுங்கிக் கொண்டு சஞ்சரித்தன. அந்தப் பிராணிகள் எல்லாம் இப்போது எங்கே? அவற்றின் இனமே அழிந்து இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் வெகு அபூர்வமாக அத்தகைய பிராணிகளின் எலும்புக் கூடுகளைக் கண்டுபிடிக்கிறார்கள். என்றும் கரையாத பனித்திரளின் அடியில் அகப்பட்டுக் கொண்டபடியால் அந்த எலும்புக்கூடுகள் லட்சக் கணக்கான வருஷம் பதப்படுத்தி வைக்கப்பட்டிருந்து இப்போது அகப்படுகின்றன. அவ்வளவு பிரம்மாண்டமான பிராணிகள் அவற்றின் வர்க்கத்துக்கு வார்ஸே இல்லாமல் நசித்துப் போனதின் காரணம் என்ன? மாறிக் கொண்டு வந்த உலகத்தின் சீதோஷ்ண நிலைமைக்கேற்ப அவை மாறாமலிருந்ததுதான். மாறிக்கொண்டு வந்த பிராணிகளோ இன்று வரையில் வாழையடி வாழையாக வாழ்ந்து பல்கிப் பெருகி வருகின்றன.

“மனித குலத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உலகத்தில் பல தேசங்களின் மக்கள் ஒவ்வொரு சமயம் மிக உன்னத நிலைமையில் இருந்திருக்கிறார்கள். பாபிலோனியா, அஸ்ஸீரியா, கிரீஸ், எகிப்து முதலிய அத்தகைய பழையகாலத்து நாகரிக மக்களின் சமூகங்கள் நசித்து அழிந்து போய்விட்டன. ஏன் தெரியுமா? காலத்துக்கேற்ப அந்தச் சமூகங்கள் மாறாமல் அப்படியே இருக்கப் பார்த்ததுதான் காரணம். ஆனால் நம்முடைய பாரத தேசமோ உலகில் வேறு எந்த தேசத்தையும் காட்டிலும் அநாதியான நாகரிகத்தை உடையது. ஆயினும் இன்றுவரை அழிந்து போகாமல் இருக்கிறது. காரணம் என்ன? இந்த தேசத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் கால மாறுதலுக்கு ஏற்பத் தங்களுடைய பழக்க வழக்கங்களை மாற்றிக் கொண்டு வந்திருப்பது

தான். ஒரே ஒரு உதாரணத்தைக் கேளுங்கள். வேத காலத்தில் நம் முன்னோர்கள் பல வித யாகங்கள் செய்தார்கள். அந்த யாகங்களில் குதிரைகள், மாடுகள், ஆடுகள் முதலிய பல ஜீவப்பிராணிகளைப் பலி கொடுத்தார்கள். அந்த மிருகங்களின் மாமிசத்தை அவிர்ப்பாகம் என்பதாகத் தேவர்களுக்கு அளித்து மிச்சத்தைத் தாங்களும் உண்டார்கள். கௌதம புத்தர் அவதரித்து யாகங்களைக் கண்டித்தார்; யாகங்களில் பலி கொடுப்பதைக் கண்டித்தார். கௌதம புத்தருடைய கொள்கைகள் உலகமெங்கும் பரவின. அந்தக் கொள்கைகளில் முக்கியமானவற்றை ஹிந்து சமூகம், அதாவது அந்தக் காலத்து பாரத மக்கள், ஏற்றுக் கொண்டார்கள். யாகங்கள் நின்று போயின. பிற்காலத்தில் ஹிந்து தர்மத்தை நிலைநாட்ட அவதரித்த ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமானுஜர் முதலிய ஆச்சாரிய புருஷர்கள் யாகம் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தவில்லை. துளசிதாஸர், துக்காராம், தியாகராஜர் முதலிய பக்த சிரோமணிகளும் யாகம் செய்யச் சொல்லவில்லை. இந்த ஒரு உதாரணத்தைப் போல ஆயிரம் உதாரணம் ஹிந்து சமூகத்தின் சரித்திரத்திலிருந்து எடுத்துக் காட்டலாம். அவ்விதம் அடிக்கடி புதிய கருத்துக்களை ஏற்றுக் கொண்டு ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் மாற்றிக் கொண்டு வந்ததினால்தான் ஹிந்து சமூகம் இன்றைக்கும் ஜீவசக்தி பெற்று விளங்குகிறது.

"அத்தகைய அவசியம், ஹிந்து சமூகம் பல ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம், தற்சமயம் ஏற்பட்டிருக்கிறது. ஹிந்து தர்மத்துக்குக் கேடு நேராமல் என்னென்ன சமூக சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று போதனை செய்ய மகாத்மா காந்தி அவதரித்திருக்கிறார். அவருடைய போதனையின்படி தீண்டாமை, சாதி வித்தியாசம், குழந்தை மணம் முதலிய வழக்கங்களை ஒழித்தே யாகவேண்டும். நம்முடைய பாட்டனார்களின் காலத்தில் கடைப் பிடித்த வழக்க பழக்கங்களையே இன்னமும் கைக்கொள்ளலாம் என்று எண்ணினோமானால் நம்மைப் போன்ற அறிவீனர்கள் இல்லை என்று ஏற்பட்டு விடும்.

"இன்னொரு விஷயம் கேளுங்கள். ஒரு குண்டூசி முழுதும் கோத்திருக்கும் தபால் தலைகளின் உயரம், உலகத்தில் ஜீவர்கள் தோன்றியதிலிருந்து இன்று வரை உள்ள காலம் என்றும், மனித குலம் நாகரிகமடையத் தொடங்கிய பிறகு இன்றுவரை உள்ள காலம் ஒரே ஒரு தபால் தலையின் பருமன் என்றும் சொன்னேன் அல்லவா? மனித சமூகம் இனியும் வளர்ச்சியடைந்து நிலைபெற்று வாழப்போகிற காலம் எவ்வளவு என்று சொல்லட்டுமா? தபால் தலைகளைத் திருச்சிராப்பள்ளி உச்சிப்பிள்ளையார் கோவில் உயரம் அடுக்கி வையுங்கள். அது தான் மனித குலத்தின் வருங்கால வாழ்வைக் குறிக்கும். பாரத தேசத்து மக்கள் காலத்துக்கு ஏற்ப மாறிக் கொண்டு வந்தால் அத்தனை காலமும் இந்த உலகில் நிலைபெற்று வாழலாம்; மேன்மையாகவும் வாழலாம். வழக்கங்களை மாற்ற மாட்டோம் என்று பிடிவாதம் பிடித்தால் சரித்திரத்தில் எத்தனையோ ஜீவப்பிராணிகளும் எத்தனையோ தேச மக்களும் அழிந்து போனது போல நாமும் அழிந்து போக வேண்டியதுதான்!......"

சூரியாவின் இந்த நீண்ட பிரசங்கத்தைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரான பிச்சுவய்யர் இப்போது குறுக்கிட்டு, "நீ சொல்கிறது சரிதான், அப்பா! யார் இல்லை என்கிறார்கள்? நம்முடைய காலத்திலேயே எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டுத்தான் இருக்கின்றன. நான் சிறு பையனாயிருந்தபோது பிராமணன் சாப்பிடுவதை மற்றச் சாதியார் பார்க்கக் கூடாது. சம பந்தி போஜனம் செய்தால் சாதிப்பிரஷ்டம் செய்து விடுவார்கள். அந்த ஆசாரத்தையெல்லாம் இப்போது யார் பார்க்கிறார்கள்? அந்தக் காலத்தில் இந்த அக்கிரகாரத்தில் ஒருவர் கூடத் தலையில் கிராப் வைத்துக் கொண்டிருந்ததை நான் பார்த்ததில்லை. இப்போது எந்த வீட்டிலாவது கிராப் வைத்துக் கொள்ளாத பையன் இருந்தால்காட்டு, பார்க்கலாம்! கிடையவே கிடையாது!" என்று சொன்னார்.

"மாமா! இந்த மாதிரி முக்கிய மில்லாத விஷயங்களில் மாறுதல் நடந்திருக்கிறது. ஆனால் இது போதுமா? போதாது. நம்முடைய பாட்டனார் காலத்தில் பண்ணையாட்களை நடத்தியதுபோல இந்தக் காலத்திலும் நடத்தலாம் என்று நினைத்தோமானால் பெரும் பிசகாக முடியும்......"

"பார்த்தீராங்காணும், பஞ்சுவய்யரே! பையன் எங்கே யெல்லாமோ சுற்றி என்ன வெல்லாமோ சக்கர வட்டமாகப் பேசுகிறானே என்று பார்த்தேன். கடைசியில் பண்ணை ஆள் விஷயத்துக்கு வந்து விட்டான். அப்பனே! அந்த விஷயம் ஹைகோர்ட்டு வரையில் போய்த் தீர்ந்து போய் விட்டது. அதைப் பற்றி நீ இப்போது பேசவேண்டாம். வேறு ஏதாவது இருந்தால் சொல்லு!" என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"சாஸ்திரிகள் சொல்வது சரிதானே, சூரியா! இந்தக் கிஸான் கிளர்ச்சி விஷயம் இருக்கவே இருக்கிறது. அதை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். நீ சுயராஜ்ய இயக்கத்தைப் பற்றிச் சொல்லு. மகாத்மா காந்தி முதலானவர்கள் இவ்வளவு பாடு பட்டார்களே! என்ன ஆயிற்று? சுயராஜ்யம் எப்போது வரப்போகிறது? நேதாஜி சுபாஷ் போஸ் இப்போது எங்கே இருக்கிறார்? ஜயப்பிரகாச நாராயணன் என்ன சொல்லுகிறார்? 'வெள்ளைக்காரா! வெளியே போ!' என்று தொண்டை கிழியக் கத்திக் கொண்டிருந்தீர்களே, அதன் பலன் என்ன? வெள்ளைக்காரன் எப்போது வெளியே போகப்போகிறான்?" என்று சிமாச்சுவய்யர் கேட்டார்.

"இவர்கள் தொண்டை கிழியும்படி 'வெள்ளைக்காரா! வெளியே போ!' என்று எங்கே கத்தினார்கள்? நம்ம ஊர் சந்தைத் தோப்பில் நின்று கொண்டு கத்தினார்கள்! வெள்ளைக்காரனுடைய காதில் விழும்படி கத்தினால்தானே? அப்படிக் கத்தியிருந்தால் வெள்ளைக்காரன் வெளியே போயிரா விட்டாலும் அவனுடைய காதாவது செவிடாகப் போயிருக்கும்! அப்படி யொன்றும் இவர்கள் செய்யவில்லையே! குண்டுச் சட்டியில் குதிரை ஓட்டிக்கொண்டிருந்தார்கள். நம்ம ஊர்க் கழுதைப் பொட்டலில் வெள்ளைக்காரன் இருக்கிறானா, என்ன? இவர்களுடைய கூச்சலைக் கேட்டு விட்டு வெளியே போவதற்கு?" என்று பஞ்சுவய்யர் வெளுத்து வாங்கினார்.

"மாமா! கொஞ்சம் பொறுங்கள். இப்போது உங்களுக்கு எகத்தாளமாய்த்தா னிருக்கும். ஆனால் கொஞ்ச நாளில் நீங்களே பார்க்கப் போகிறீர்கள்! வெள்ளைக்காரன் மூட்டை கட்டிக் கொண்டு வெளியேறத்தான் போகிறான்!" என்றான் சூரியா.

"என்றைக்குப் போகப் போகிறான், எந்தக் கப்பலில் ஏறப் போகிறான் என்றுதான் நானும் கேட்கிறேன். எதற்காக இவ்வளவு தாமதம் செய்கிறான்? நான் நட்சத்திரம் பார்த்துக் கொண்டிருக்கிறானா? அடால்ப் ஹிட்லர்தான் நான் நட்சத்திரம் பார்த்து அழிந்து போனான் என்று சொன்னார்கள். இங்கிலீஷ்காரனுக்குக்கூட நான் நட்சத்திரம் பார்ப்பதில் நம்பிக்கை வந்து விட்டதோ?" என்றார் சிமாச்சு வய்யர்.

"அப்படியானால் நம்ம அப்பாத்துரை சாஸ்திரிகளிடம் வந்து கேட்கட்டும்; திவ்வியமான நாள் நட்சத்திரம் பார்த்துச் சொல்வார்!" என்றார் பஞ்சுவய்யர்.

"இங்கிலீஷ்காரனாவது, நாளும் நட்சத்திரமும் பார்க்கவாவது? அவனுக்கு வயிற்றிலே பல்லாயிற்றே! அவனைப் பாம்பு என்று நினைத்துத் தாண்டவும் முடியாது, பழுதை என்று எண்ணி மிதிக்கவும் முடியாதே! ஹிட்லர் நாள் நட்சத்திரம் பார்க்கிறான் என்று இங்கிலீஷ்காரன் அறிந்து அந்தக் கணக்கை வைத்துக் கொண்டு அவனை ஒரே அமுக்காய் அமுக்கி விட்டானே?" என்றார் கர்ணம் வேலாயுத முதலியார்.

"நான் ஒன்று சொல்கிறேன். ஹிந்து சாஸ்திரத்திலே சொல்கிற நாள் நட்சத்திரம் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களுக்குத்தான் பயன்படும். எங்கேயோ அக்கரைச் சீமையில் இருக்கிற நீச்சர்களுக்கு அது பயன்படாது!" என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"மாமா! இங்கிலீஷ்காரனை நீங்கள் நீசன் என்றுதான் சொல்லுங்கள்; வேறு என்னதான் சொல்லுங்கள்;

அவன் காதில் விழப்போவதில்லை. ஆனால் நான் தெரிந்துகொண்ட ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். காலத்துக்குத் தகுந்தபடி மாறுகிற ஜாதி தான் உலகத்தில் நீடித்து நிற்கும் என்று சற்று முன்னால் சொன்னேன் அல்லவா? அப்படிப்பட்ட குணம் இந்த நாளில் இங்கிலீஷ்காரர்களிடம் இருக்கிறது. இதைக் கேளுங்கள். இங்கிலீஷ்காரர்கள் யுத்தத்தில் ஜயித்ததற்கு முக்கிய காரணமாயிருந்தவன் யார் தெரியுமா?''

"தெரியாமல் என்ன? அமெரிக்கன்!'' என்றார் சிமாச்சுவய்யர்.

"நான் அதைச் சொல்லவில்லை, மாமா! இங்கிலீஷ்காரர்கள் அமெரிக்கா முதலிய மற்ற தேசத்தாரின் உதவியினால் ஜயித்தது உண்மைதான். ஆனாலும் இன்றைக்கு இங்கிலீஷ் சாதி பிழைத்திருப்பதற்குக் காரணமாய் இருந்த ஒரு இங்கிலீஷ்காரன் உண்டு. அவன் பெயர் சர்ச்சில்!''

"தெரியும், அப்பா, தெரியும்! சர்ச்சிலை எங்களுக்குத் தெரியாதா, என்ன? அவன்தான் வாயில் ஒரு முழ நீளச் சுருட்டை வைத்துக் கொண்டு ஒவ்வொரு ரயில்வே ஸ்டேஷன் சுவரிலும் தொங்குகிறானே?''

"வாஸ்தவம். அந்தச் சர்ச்சில்தான் இங்கிலீஷ்காரர்களை இந்த யுத்தத்தில் அடியோடு அழிந்துபோகாமல் காப்பாற்றினான். ஆனால் யுத்தம் முடிந்தவுடனே இங்கிலீஷ்காரர்கள் என்ன செய்தார்கள்? அந்தச் சர்ச்சிலை மூலையில் உட்கார வைத்துவிட்டு ஆட்லி என்பவனிடம் இராஜ்யத்தைக் கொடுத்திருக்கிறார்கள். ஏனென்றால், காலப் போக்கை அறிந்து தங்கள் போக்கையும் மாற்றிக்கொள்ளும் சக்தி இங்கிலீஷ் ஜாதியிடம் இருக்கிறது. இந்தியாவிலே இனி இங்கிலீஷ்காரர்களுடைய ராஜ்யம் நடக்காது என்பது நம்மைக் காட்டிலும் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால் இந்தியாவை இந்தியர்களிடம் ஒப்படைத்து விட்டுக் கூடிய சீக்கிரம் போகத்தான் போகிறார்கள். நீங்களும் நானும் அதைப் பார்க்கத்தான் போகிறோம்!''

"சரிதான், அப்பா, சரிதான்! முப்பது வருஷமாய் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நானும் கேட்டுக் கொண்டுதா னிருக்கிறேன். முன்னொரு சமயம் 'ஒரு வருஷத்திலே சுயராஜ்யம் வரப்போகிறது' என்று சொன்னார்கள். அது வராமல் டிமிக்கி கொடுத்துவிட்டது. அப்புறம் உப்பு சத்தியாக்கிரஹத்தின்போது சுயராஜ்யம் 'இதோ வரப்போகிறது!' என்றார்கள். 'சுயராஜ்யம் வாங்கி வருகிறதற்காக மகாத்மா லண்டனுக்குப் போயிருக்கிறார்!' என்றார்கள். 'வைஸ்ராய் இர்வின் சரணாகதி அடைந்துவிட்டான்' என்றார்கள். கடைசியில் ஒன்றுமில்லை என்று ஆகிவிட்டது. இப்போதும் 1942-ம் வருஷத்தில் 'ஆச்சுப் போச்சு' என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். நேதாஜி படையெடுத்து வருகிறார் என்று சொன்னார்கள். எல்லாம் வெறும் சவடால் பேச்சு என்று ஆயிற்று. அப்பேர்ப்பட்ட பயங்கரமான யுத்தம் நடந்தபோது, ஹிட்லர் ஒரு பக்கமும் டோஜோ ஒரு பக்கமும் நெருக்கிக் கொண்டிருந்தபோதே, — இங்கிலீஷ்காரன் மசியவில்லையே! யுத்தத்தில் ஜயித்த பிறகா இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுத்துவிடப் போகிறான்!'' என்றார் வேலாயுத முதலியார்.

"முதலியார்வாள்! உங்களைப்போல் தான் நானும் நினைத்தேன். இன்னும் அநேகரும் யுத்த சமயத்திலேதான் இந்தியாவின் சுயராஜ்யத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று எண்ணினார்கள். ஆனால் அவதார புருஷரான மகாத்மா வேறு விதமாக நினைத்தார். யுத்த காலத்தில் இங்கிலீஷ்காரர்களுக்குக் கஷ்டம் கொடுக்கக் கூடாது என்று சொன்னார். நல்ல பாம்பு மந்திரத்துக்குக் கட்டுப்படுவது போல நாம் சத்தியத்துக்குக் கட்டுப்பட வேண்டும் என்று கூறினார். அவர் பேச்சை மீறி என்னைப்போல் எத்தனையோ பேர் இரகசியப் புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டோம். அதனால் ஒரு பயனும் கிடைக்கவில்லை. கடைசியாக, இப்போது, மகாத்மாவின் வழியினால்தான் இந்தியாவுக்குக் கதிமோட்சம் கிட்டப் போகிறது என்ற நிச்சயத்துக்கு வந்திருக்கிறோம்!'' என்றான் சூரியா.

"நீயும் உன்னைப் போன்றவர்களும் மெத்தப் படித்த புத்திசாலிகள். அதனால் உங்களுக்குக் காந்தி காட்டுகிற வழிதான் சரியான வழி என்று



நிச்சயிக்க இவ்வளவு காலம் ஆயிற்று. ஆனால் நாங்கள் எல்லாரும் படிப்பு வாசனையில்லாத பட்டிக்காட்டு மனிதர்கள். ஆகையால் ஆரம்பத்திலேயே அந்த நிச்சயத்துக்கு வந்துவிட்டோம். இந்தியாவுக்குக் கதிமோட்சம் பிறந்தால் மகாத்மாவினால்தான் பிறக்கவேண்டும், வேறு யாராலும் இல்லை என்று முப்பது வருஷத்துக்கு முன்னாலேயே முடிவு செய்துவிட்டோம். உன் அப்பாவும் நானும் அன்றைக்குக் கதர் கட்ட ஆரம்பித்தவர்கள் இன்றைக்கும் கதர் கட்டி வருகிறோம். தெரியுமோ, இல்லையோ? சீமாச்சு இப்போது விற்கிறது மில் துணியானாலும் அவன் கட்டிக்கொள்கிறதும் கதர் வேஷ்டிதான்!" என்று சொன்னார் பஞ்சுவய்யர்.

"மாமா! காந்தி மகானிடம் உங்களுக்கு அவ்வளவு பக்தியும் நம்பிக்கையும் எப்போது இருக்கிறதோ, அப்போது அவர் சொல்கிறதை முழுதும் கேட்டு அப்படியே நடக்க வேண்டியது தானே?" என்றான் சூரியா.

"என்ன காரியத்தில் இதுவரை மகாத்மா சொல்கிறபடி நாங்கள் நடக்கவில்லை, நீ மட்டும் நடந்துவிட்டாய் என்பதைச் சொல்லேன் பார்க்கலாம்!" என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"சுயராஜ்யம் கூடிய சீக்கிரம் வரப்போகிறது, அதற்குள்ளே நம்மிடமுள்ள குறைகளை நீக்கிக்கொண்டு சுயராஜ்யத்துக்குத் தயாராக வேணும் என்று மகாத்மா சொல்கிறார்."

"என்ன குறை எங்களிடம் இருக்கிறது, அதை எப்படி நீக்கிக்கொள்ள வேண்டும் என்று சொல்லேன்!"

"முக்கியமாக, கிராமங்களில் உள்ள மிராசுதார்களுக்கும் குடிபடைகளுக்கும் தகராறு இருக்கக் கூடாது. உழைக்கிறவனுக்கு உழைப்பின் பலன் என்கிற கொள்கையை எல்லாரும் ஒப்புக்கொள்ள வேண்டும்."



"சூரியநாராயணய்யரே! நீர் வேறு என்ன வேணுமானாலும் பேசும். இந்த ஆள் படை விஷயத்தைப்பற்றி மட்டும் பேச வேண்டாம். உம்முடைய தகப்பனார் ஏற்கெனவே இடங் கொடுத்துக் கொடுத்து அதன் பலனை இப்போது அநுபவிக்கிறார். அவருடைய உயிருக்கே உலை வைக்கப் பார்த்தார்கள். தெய்வாதீனமாகப் பிழைத்தார்!......"

"அது தெரிந்தும் இந்தப் பிள்ளையாண்டான் கிஸான்களுக்குப் பரிந்து பேசுகிறானே? அதுதான் எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது!"

"மாமா! அப்பாவை எங்களுடைய ஆட்கள் கொல்ல யத்தனித்தார்கள் என்பதை நான் நம்பவே மாட்டேன். அப்படி ஒரு நாளும் நடந்திராது. யாரோ வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் செய்த காரியத்துக்கு ஏழைக் குடிபடைகள் மேல் எதற்காகப் பழியைப் போடுகிறீர்கள்!"

"சரி! விடு! உன்னிடம் இதைப் பற்றி வாதம் இடுவானேன்! போலீஸ் விசாரணை நடந்து வருகிறது. சில நாளைக்கெல்லாம் உண்மை என்னவென்று தெரிந்து விடுகிறது. அப்புறம் இந்த மாதிரி நீ பேச மாட்டாய்!"

இந்தச் சமயத்தில் லலிதா வீட்டு வாசலுக்கு வந்து, "அண்ணா! உன்னை அப்பா கூப்பிடுகிறார்!" என்றாள்.

"சரி, அப்பாவைப் போய்ப் பார்! அவர் சொல்கிறதையாவது கேட்டு அதன்படி செய்!" என்று சொல்லி விட்டுத் திண்ணைப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் சபையைக் கலைத்து விட்டுப் போய்ச் சேர்ந்தார்கள்.

சூரியா தன் தந்தை இருந்த அறைக்குள் சென்று அவர் படுத்திருந்த கட்டிலுக்கு அருகில் உட்கார்ந்தான்.

"மன்னியுங்கள், அப்பா! நாங்கள் சத்தம் போட்டுப் பேசியது உங்களுக்குத் தலை நோவாக இருந்திருக்கும். தெரியாமல் இரைந்து பேசி விட்டேன்!" என்றான்.

"சூரியா! நீ பேசியதெல்லாம் என் காதில் விழுந்து கொண்டிருந்தது. அதனால் எனக்குத் தலைவலி உண்டாகவில்லை. ரொம்பவும் சந்தோஷம் உண்டாயிற்று. உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும் என்று நானே எண்ணிக் கொண்டிருந்தேன். சில நாளாக நான் யோசனை செய்து பார்த்ததில் நீ சொல்வதுதான் சரி என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். நீ இந்த ஊரில் தங்கி உன்னுடைய இஷ்டப்படி எல்லாம் நடத்து; குடிபடைகளுக்கு என்ன செய்ய வேண்டுமோ செய். இன்னொரு விஷயமும் சொல்கிறேன். என்னை வழி மறித்து அடித்தவர்கள் நம்முடைய ஆட்கள் என்று நான் ஒருநாளும் நம்பவில்லை. அவர்கள் தூண்டுதலினால் நடந்தது என்பதும் சரியல்ல. இதைப்பற்றி எந்தக் கோயிலில் வேண்டுமானாலும் நான் சத்தியம் செய்யத் தயார்!" என்றார் கிட்டா வய்யர்.

"அப்பா! நீங்கள் சொல்வது எனக்கு எவ்வளவோ சந்தோஷமா யிருக்கிறது. ஆனால் இந்தப் பெரிய பொறுப்பை என் தலையில் ஏன் போடுகிறீர்கள்? என்னால் அதை வகிக்க முடியுமா? நீங்களே எல்லாம் செய்

யுங்கள். நானும் கூட இருக்கிறேன். மேலும் நானாக ஏதாவது செய்தால் அண்ணா கங்காதரன் ஒப்புக்கொள்வானா? என்பேரில் கோபித்துக் கொண்டு சண்டைபிடிக்கமாட்டானா?'' என்று சூரியா கேட்டான்.

"கங்காதரனின் எண்ணம் இப்போது ரொம்பவும் மாறிப்போயிருக்கிறது. அப்படி அவன் ஆட்சேபித்தாலும் என்ன? நான் உனக்குப் பூரண அதிகாரம் தருகிறேன். உன் இஷ்டப்படி செய். எனக்கு இந்த ஊரில் இருக்க இனிப் பிரியமில்லை. வானப்பிரஸ்த ஆசிரமத்தை என்னுடைய மனம் நாடுகிறது. எங்கேயாவது யாத்திரை போகவேண்டும் என்று தோன்றுகிறது. லலிதா தேவபட்டணத்தில் வந்திருக்கும்படி கூப்பிடுகிறாள். காசி, ஹரித்வாரம், பத்ரிநாத் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்வதற்குச் சீதா என்னை அழைத்துப் போவதாகச் சொல்கிறாள்......''

"சீதா எதற்காக உங்களை அழைத்துப் போகவேணும், அப்பா! நான் அழைத்துப் போகிறேன். அந்த இடங்களெல்லாம் எனக்குத் தெரியும். காசியில் ஆறு மாதம் இருந்தேன்.''

"சூரியா! நீ என்னைக் காசிக்கு அழைத்துக்கொண்டு போவதைக் காட்டிலும் இங்கேயிருந்து குடிபடைகளைக் கவனித்துச் செய்ய வேண்டியதைச் செய்தால் அதுவே எனக்குப் பரம திருப்தியாயிருக்கும்.''

இந்தச் சமயத்தில் சரஸ்வதியம்மாள் உள்ளேயிருந்து வந்து, "சூரியா! அப்பாவோடு அதிகமாகப் பேச்சுக் கொடுக்காதே! அர்த்த ராத்திரி ஆகப்போகிறதே! அவர் தூங்க வேண்டாமா?'' என்றாள்.

"அம்மா சொல்வது சரிதான். தூங்குங்கள், அப்பா! விவரமாக நாளைக்குப் பேசிக்கொள்ளலாம். எப்படியும் உங்கள் இஷ்டப்படி நடந்து கொள்வேன்!'' என்றான் சூரியா.

மறுநாள் தந்தையுடன் தொடர்ந்து பேச்சு நடத்துவதற்குச் சூரியாவுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

கிட்டாவய்யரைத் தீர்த்த யாத்திரை அழைத்துப் போவது யார் என்ற பிரச்னையும் எழுவதற்கு இடமில்லாமல் போய்விட்டது.

திருமூலர் என்னும் மகான் மனித வாழ்வின் அநித்தியத்தைக் குறிப்பிடுவதற்கு ஒரு அற்புதமான பாடலைப் பாடியிருக்கிறார்.

**அடப்பண்ணி வைத்தார்**
**அடிசிலை உண்டார்**
**மடக் கொடியாரோடு**
**மந்தணம் புகுந்தார்!**
**இடப்பக்கமே இறை**
**நொந்ததே என்றார்**
**கிடக்கப் படுத்தார்**
**கிடந்தொழிந்தாரே!**

இராத்திரி அறுசுவை உண்டி தயாரித்து வைத்ததை ஒரு கிரகஸ்தர் சாப்பிட்டார். பிறகு மனைவியோடு சயன அறைக்குச் சென்றார். "இடது மார்புக்கு அருகில் கொஞ்சம் வலிக்கிறது!'' என்று சொன்னார். தூங்கினால் வலி போய்விடும் என்று படுத்தார். படுத்தவர் படுத்தவர்தான்! பிறகு எழுந்திருக்கவேயில்லை.

திருமூலர் வாக்கின் கடைசி வரி கிட்டாவய்யரின் விஷயத்தில் பலித்துவிட்டது. இராத்திரி சூரியாவிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டிவிட்டு நிம்மதியோடு படுத்துத் தூங்கியவர் மறுபடி எழுந்திருக்கவே இல்லை.

அடுத்த நாள் காலையில் அந்த வீட்டில் பரிதாபமான ஓலக்குரல்களும் துயரம் ததும்பிய பிரலாபமும் ஒப்பாரியும் ஒருமித்து எழுந்தன.

எல்லாரிலும் அதிக துயரத்துடன் புலம்பி அதிகமாகக் கண்ணீர் விட்டுக் கதறியவள் கிட்டாவய்யரின் மருமகளாகிய சீதாவே யாகும்.

## எட்டாம் அத்தியாயம்

# "மாமழை போற்றுதும்"

போர்க்களத்தில் அம்பு மழையைப் பொருட்படுத்தாமல் குறிப்பிட்ட இலட்சியத்தை நோக்கிச் செல்லும் வீரனைப் போல் அந்த ரயில் வண்டி காற்றையும் மழையையும் பொருட்படுத்தாமல் போய்க்கொண்டிருந்தது.

இரண்டாம் வகுப்பு வண்டி ஒன்றில் சீதாவும், லலிதாவும், லலிதாவின்

புருஷன் பட்டாபிராமனும் குழந்தைகள் இருவரும் இருந்தார்கள்.

அவர்கள் எல்லாருடைய கவனமும் வண்டிக்கு வெளியே தோன்றிய காட்சிகளில் சென்றிருந்தது.

வானம் முழுதும் கருமேகங்கள் மூடி மழை பெய்து கொண்டிருந்தபடியால் பகல் நேரம் அந்திப் பொழுதைப்போல் மங்கி இருள் அடைந்து தோன்றியது.

சடசடவென்று அடித்த மழை ஒரு பக்கத்து ஜன்னல் கண்ணாடிகளைத் தாக்கிச் சுக்குநூறாக்கிவிட முயன்று கொண்டிருந்தது.

ஆனால் இன்னொரு பக்கத்து ஜன்னல் கண்ணாடிகளின் வழியாக வெளியே தோன்றிய பலவிதக் காட்சிகள் தெளிவாகப் புலனாகிக் கொண்டிருந்தன.

நீர் வளமும் நிலவளமும் நிறைந்து செழித்த பிரதேசத்தின் வழியாக ரயில் அச்சமயம் போயிற்று.

பெருங் காற்றில் பேயாட்டம் ஆடிய தென்னை மரங்களின் மட்டைகள் வானத்து மேகங்களின்மீது கோபங் கொண்டு தாக்கி அடித்தன.

அடர்ந்து செழித்து வளர்ந்திருந்த மூங்கில் மரங்கள் நாலாபக்கமும் சுற்றிச் சுற்றி மழைத் துளிகளைத் தாக்கிச் சிதறச் செய்து கொண்டிருந்தன.

மாமரக் கிளைகள் அலங்கோலமாக ஆடியபோது, அவற்றில் மழைக்கு ஒதுங்கிப் பதுங்கிக் கொண்டிருந்த பட்சிகளின் பாடு மிகவும் கஷ்டமாகப் போய்விட்டது.

திடீரென்று ஒரு மாமரத்தின் கிளை முறிந்து கீழே விழுந்தது. அதிலிருந்த ஒரு காக்கை மழையினால் நனைந்த சிறகுகளை விரிக்க முடியாமல் விரித்து, பறக்க முடியாமல் பறந்து, கரகர வென்று கட்டிப் போயிருந்த தொண்டையினால் "அபயம்" "அபயம்" என்று கூவிக்கொண்டு இன்னொரு மரத்தில் போய் உட்கார்ந்தது.

"ஐயோ! பாவம்!" என்று சீதா பரிதாபக் குரலில் கூறிவிட்டு லலிதாவைப் பார்த்தாள். லலிதா குழந்தை பாலுவிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்தபடியால் பட்டாபிராமனுடைய முகத்தை நோக்கினாள்.

பட்டாபிராமன் அச்சமயம் சீதாவைக் கவனித்துக் கொண்டிருந்தான். மழையில் நனைந்த காக்கைக்கு அவள் இரக்கப் பட்டதைக் குறிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தான்.

"அந்தக் காக்கையின் பாடு கஷ்டந் தான்!" என்று சொன்னான்.

"நான் பிறந்த வேளையில் அந்தக் காக்கையும் பிறந்திருக்க வேண்டும்!" என்றாள் சீதா.

லலிதா திரும்பிப் பார்த்து, "எந்தக் காக்கை? எதைப்பற்றிப் பேசுகிறீர்கள்!" என்று கேட்டாள்.

சீதாவும் பட்டாபிராமனும் பேசாமல் இருந்தார்கள்.

"ஒரே மௌனமாயிருக்கிறீர்களே? என்ன விஷயம் என்று எனக்குச் சொல்லக் கூடாதா?" என்று லலிதா மறுபடியும் கேட்டாள்.

"ஒரு மரக்கிளை ஒடிந்து விழுந்தது. அதிலிருந்த ஒரு காக்கை அலறி அடித்துக் கொண்டு இன்னொரு மரத்துக்குப் பறந்து சென்றது! நீ கவனிக்க வில்லை!" என்றான் பட்டாபிராமன்.

"பாலு என்னமோ கேட்டான். அவனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தேன்! அதனால் கவனிக்கவில்லை!" என்றாள் லலிதா.

"அதைத்தான் நானும் சொன்னேன்!" என்றான் பட்டாபிராமன்.

"குழந்தையைக் காட்டிலும் எனக்குக் காக்கை ஒசத்தியில்லை!" என்று சொன்னாள் லலிதா.

"குழந்தையைக் காட்டிலும் காக்கை ஒசத்தி என்று யார் சொன்னது?" என்றான் பட்டாபிராமன்.

ரயில் போய்க்கொண்டேயிருந்தது.

* * *

ஒரு ஊருக்குப் பக்கத்தில் வயல்கள் சூழ்ந்திருந்த பொட்டைத் திடலில் ஒரு சிதை எரிந்து கொண்டிருந்தது.

சிதையின் தீ மழையில் நனைந்து அணைந்து போய் விடாதபடி சிலர் அதன்மேல் அவசர அவசரமாகக் கீற்றுப் பந்தல் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

"அதோ பார், அம்மா! நெருப்புக்கு மேலே பந்தல் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்! எதற்காக, அம்மா?" என்று பட்டு கேட்டாள்.

எல்லாரும் அந்தப் பக்கம் பார்த்தார்கள். சிதை எரிவதைக் கண்டதும், "மாமாவையும் இந்த மாதிரிதானே சிதையில் வைத்துக் கொளுத்திவிட்டு வந்தோம்?" என்று சீதா சொல்லிவிட்டு விம்மி அழத் தொடங்கினாள்.

லலிதாவின் கண்களிலும் கண்ணீர் துளித்தது. ஆனால் அவள் அழவில்லை.

"அப்பா செத்துப் போனதுகூட எனக்கு அவ்வளவு பெரிதாக இல்லை. நீ துக்கப்படுகிறதைப் பார்த்தால்தான் அதிக வருத்தமாயிருக்கிறது!" என்று லலிதா கூறினாள்.

"மாமா செத்துப் போனதற்காக யாரும் வருத்தப்பட வேண்டிய அவசியமே இல்லை. அவர் மிக மேலான கதிக்குப் போயிருப்பார். மோட்சங்களுக்குள்ளே மிக உயர்ந்த மோட்சத்துக்கு அவர் நிச்சயம் போயிருப்பார்!" என்றான் பட்டாபிராமன்.

சீதா விம்மலை நிறுத்திக் கண்களையும் துடைத்துக்கொண்டு, "அது வாஸ்தவந்தான். சூரியாவைப் போன்ற ஒரு பிள்ளையைப் பெற்றதற்கே அவர் எவ்வளவோ மேன்மையான கதிக்குப் போயிருக்க வேண்டும்!" என்றாள்.

"சந்தேகமில்லை. பத்து நாளைக்குள் சூரியா குடியானவர்களை எவ்வளவு சரிக்கட்டிக் கொண்டு விட்டான்!" என்று பட்டாபிராமன் சொன்னான்.

"அப்பா செத்துப்போன அன்றைக்கேதான் குடிபடைகள் எல்லாம் கூட்டமாய் வந்து கதறி அழுதுவிட்டார்களே!" என்றாள் லலிதா.

ரயில் போய்க்கொண்டே யிருந்தது.

* * *

**எ**ங்கே பார்த்தாலும் தண்ணீர் மயமாகக் காணப்பட்டது.

"இது என்ன, ஒரே ஜலப்பிரளயமாக வல்லவா இருக்கிறது? ராஜம்பேட்டையைக் காட்டிலும் இங்கே மழை அதிகம் போலிருக்கிறதே!" என்றான் பட்டாபிராமன்.

"நாம் ரயில் ஏறிக் கிளம்பிய பிறகு அங்கேயும் மழை கொட்டி யிருக்கலாம்!" என்றாள் சீதா.

"மழை இல்லை, மழை இல்லை என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். இப்போது அடைத்து வைத்துக்கொண்டு கொட்டுகிறது!" என்றாள் லலிதா.

"மழை கொஞ்ச நாள் இல்லாமற் போனால்தான் மழை எவ்வளவு அவசியமானதென்று ஜனங்களுக்குத் தெரிகிறது. வேதகாலத்து ரிஷிகள் சூரியனை எப்படித் தோத்திரம் செய்தார்களோ அப்படியே வருணனையும் பிரார்த்தனை செய்தார்கள். சிலப்பதிகாரம் என்ற தமிழ்க் காவியத்தில் சூரியனையும் சந்திரனையும் போற்றி விட்டு, 'மாமழை போற்றுதும்' 'மாமழை போற்றுதும்' என்று அழகாகப் பாடி யிருக்கிறது!" என்று பட்டாபிராமன் தன்னுடைய புலமையைத் தெரியப்படுத்திக் கொண்டான்.

"இருந்தாலும் மழையை ரொம்பப் போற்றி விடாமலிருந்தால் நல்லது. இப்படி ஒரே கொட்டாகக் கொட்டினால் ஏழை ஜனங்கள் என்ன செய்வார்கள்? ஐயோ! பாவம்! அதோ பாருங்கள்!" என்றாள் லலிதா.

அவள் சுட்டிக் காட்டிய பக்கத்தில் ஒரு கிராமம் இருந்தது. கிராமத்து வீதிகளுக்குள்ளே மழைத் தண்ணீர் ஆற்று வெள்ளம் போலப் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது.

ஒரு குடிசை வீட்டின் கூரையைப் பெருங் காற்று அப்படியே பிய்த்துத் தூக்கி அப்பாலே எறிந்திருந்தது.

குடிசையில் பாக்கி நின்ற குட்டிச் சுவர்கள் மழையில் நனைந்து கரைந்து கொண்டிருந்தன.

குடிசைக்குள்ளே யிருந்த சட்டிப் பானை தட்டு முட்டுச் சாமான்களை ஒரு ஸ்திரீயும் இரண்டு ஆண் பிள்ளைகளும் எடுத்து அப்புறப்படுத்த முயன்று கொண்டிருந்தார்கள்.

"இந்த மாதிரி எவ்வளவு குடிசை இன்றைக்கு இடிந்து விழுந்து போச்சோ? அந்தக் குடிசைகளில் வசித்த ஏழை ஜனங்கள் எல்லாரும் என்ன கஷ்டப் படுவார்களோ?" என்று லலிதா பரிதாபப் பட்டாள்.

"எனக்கு இங்கேயே ரயிலிலிருந்து குதித்து விடலாம் என்று தோன்றுகிறது. ஓடிப்போய் வீடு வாசல் இழந்த அந்த ஏழை ஜனங்களுக்கு ஒத்தாசை செய்யவேண்டும் என்று ஆசையா யிருக்கிறது!" என்றாள் சீதா.

மழை மேலும் கடுமையாகப் பெய்தது. காற்று இன்னும் தீவிர வேகமடைந்து மோதி அடித்தது.

ரயில் அசைந்து ஆடிக் கொண்டும் திணறித் திண்டாடிக் கொண்டும் தண்டவாளங்களின் மீது ஊர்ந்து சென்று கொண்டே யிருந்தது.

# நிலையான எழிலுக்கு...






உங்கள் இருவித சௌந்தரிய தின சரியை: பிரதி இரவும், பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமினால் முகத்தை சுத்தம் செய்யுங்கள். செழுமையான இந்த க்ரீமைத் தடவி, அதன் தைலங்கள் உள்ளிறங்கி மலினதைகளை வெளிப்பேற்றும்படி மெதுவாகத் தேயுங்கள் - துடைத்து நீக்கவும். இப்போது பாருங்கள் உங்கள் முகம் புதுமலர் காந்தியுடன் மிளிர்வதை!

பிரதி காலையும், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் லேசாகத் தடவுங்கள். அது உடனே ஒரு அதிருசியபடலமாகி, பகல் முழுதும் சூரிய கிரணங்களினின்று உங்கள் சௌந்தரியத்தைப் பாதுகாக்கிறது!

## ...பாண்ட்ஸ் இரு க்ரீம்கள்

உங்கள் வதனம் மோகன எழிலுடன் விளங்க உங்களுக்கு இரண்டு க்ரீம்கள் தேவை. இரவு அரிய தைலங்கள் கலக்கப் பெற்ற பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், சூக்ஷ்ம மலினதைகளைப் போக்கி முகத்தை சுத்தம் செய்ய. காலை, குளுமையான மெல்லிய பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், சூரியகிரணங்களினால் முகம் கறுத்து காந்தி குன்றாமல் பாதுகாக்க.

# பாண்ட்ஸ்



வியாபார விவரங்களுக்கு: L. D. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிமிட்.
பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - கோவை கோவா -
கராச்சி - கொழும்பு - ரங்கூன்

# வளரும் தமிழ்

## முல்லைக் கொடியாள்

**தூ**ய தமிழகத்தில் 'மஞ்சள் பிரசுரங்கள்' என்று சொல்லப்படும் ஆபாசக் களஞ்சியங்கள் பரவி வருகின்றனவே என்று தமிழ்நாட்டு அறிவாளிகள் பலர் கவலைப் படுகிறார்கள். அவர்களுடைய கவலையினிடையே மகிழ்ச்சியையும் நம்பிக்கையையும் ஊட்டும் சில அம்சங்களும் இல்லாமற் போகவில்லை. அதாவது உயர்ந்த இலட்சியங்களையும் உண்மையான சீர்திருத்தக் கருத்துக்களையும் கொண்ட நல்ல பிரசுரங்களுக்கும் தமிழ்நாட்டில் நல்ல வரவேற்பு இருப்பதைக் காண்கிறோம். "முல்லைக் கொடியாள்" என்னும் சிறு கதைத் தொகுதி வெளியான இரண்டாவது ஆண்டில் இரண்டாவது பதிப்பு வெளியாகியிருப்பது நம்பிக்கையை ஊட்டும் நிகழ்ச்சியாகும்.

தமிழ்மக்களின் சமூக வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு "விந்தன்" எழுதிய அருமையான இருபத்தைந்து சிறுகதைகள் இந்த நூலில் வெளியாகியிருக்கின்றன.

தமிழர் சமூக வாழ்க்கையில் குடி கொண்டுள்ள அநீதிகளையும் கொடுமைகளையும் இக் கதைகள் இடித்துக் காட்டுகின்றன. அவ்வாறே தமிழர் வாழ்க்கையில் விளங்கும் மேன்மைகளையும் இன்பங்களையும் எடுத்துக் காட்டுகின்றன.

"விந்தன்" தமிழ்நடை எளிமையும் ஓட்டமும் ஜீவ சக்தியும் வாய்ந்தது என்பதை நேயர்கள் அறிவார்கள். முதலில் "கல்கி" பத்திரிகையில் வெளியான கதைகளைக் கொண்ட இந்த நூலுக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் முதல் ஆண்டு விழாவில் முதற்பரிசு ஐந்நூறு ரூபாய் அளிக்கப்பட்டது. எனவே, "தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்ற கதைத் தொகுதி" என்னும் சிறப்பு விருதை இந்த நூலின் மேலட்டை பெருமையுடன் தாங்கிக்கொண்டிருக்கிறது.

விலாசம்: ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: ரூ. 3.

## கார்குடி

**வா**னத்தில் தோன்றிய வர்ண விஸ்தாரங்கள் அனைத்தும் அவளிடத்தில் இருந்தன. அப்போது அவள் அணிந்திருந்த அந்தக் கத்திரிப்பூ நிறப் பாவாடையும் அதன் ஓரத்திலே கருநீலப் பட்டில் பொன் நாகங்கள் போல் ஓடிய ஜரிகைக் கோடுகளும் அவன் மனத்தில் நிரந்தரமாய்ப் பதிந்து விட்டன. அந்தப் பெண் பங்கஜம் அவன் அத்தை மகள் தான். பணக்கார அத்தையின் ஆதரவில் தான் அவன் படித்துப் பரீட்சை தேறினான்.

இடையில் தோன்றினாள் அந்த ஏழைப் பெண். அவளிடம் அழகு இல்லை 'யென்றாலும் பிறரது அநுதாபத்தைப் பெற்றுவிடும் தோற்றம் இருந்தது. பல பேருடைய எதிர்ப்புக்கு மத்தியில் அந்தப் பெண்ணுக்கு அவன் மாலையிட்டான். பிறகு தனிக் குடித்தனம். ஏழைப் பெண் அதை மகாராணி ராஜ்யமாக நடத்தி எடுத்ததற்கெல்லாம் செலவு வைக்கிறாள். கொஞ்ச நாட்களுக்கெல்லாம் அவள் வாழ்க்கை முடிந்து விடுகிறது. அவன் அத்தையின் பெண் பங்கஜத்துடன் புது வாழ்க்கையைத் தொடங்குகிறான்.

"கார்குடி" என்ற பெயருக்கேற்ப இக் கதை மேலும் கீழும் ஏறி இறங்கி அசைந்து ஆடிக்கொண்டே செல்கிறது.

ஆசிரியர்: கா. ஸ்ரீ. ஸ்ரீ.; பிரசுரம்: புத்தக நிலையம், புதுக்கோட்டை; விலை ரூ. 3½.



"ஏன், ஸார்! முன்கூட்டியே பிரசுரித்திருப்பதாக இந்தப் பத்திரிகையில் வெளியாகியிருக்கும் செய்தி நம்பத்தக்கதா?"

"அது இருக்கட்டும், ஐயா! முன்கூட்டியே வெளியாகியிருக்கும் இந்தப் பரீட்சைத்தாளில் உள்ள கேள்வி நம்பத்தக்கதா?"



# ஆற்றங்கரைப் பிள்ளையார்

துஷ்யந்தன்

புது வெள்ளம் குமிழியிட்டுப் பெருகி வந்து கொண்டிருக்கிறது. குளித்துவிட்டு மேலெல்லாம் நீர் சொட்ட, கையில் குடமேந்தி மெல்ல நடந்து வரும் கன்னிப் பெண் போலச் சுழித்து நெளிந்து ஓடி வருகிறாள் காவேரி. புதுமையின் பொலிவும் இளமையின் குறுகுறுப்பும் அவளிடம் பொங்குகின்றன. தளர்நடை போட்டுக் கொஞ்சிக் குழைந்து வரும் சிறு பெண்ணாகவேதான் இருக்கிறாள் இன்னும்!

காவேரியில் புது வெள்ளம் கண்டதும் சுற்றுப்புறமே சிரித்து மகிழ்கின்றது. கூன் விழுந்து பட்டுப்போன மரங்கள் கூடச் சிலிர்த்து நிற்கின்றன. கரையோரமாக இருந்த அரசமரம், "வாடியம்மா, வா!" என்று ஆனந்தத்தோடு வரவேற்கிறது அவளை. மேலிருந்து விழும் சருகுகளையெல்லாம் அன்புக் காணிக்கையாகப் பெற்றுக் கொண்டு 'களுக்' கென்று ஒரு சிரிப்புச் சிரிக்கிறாள் கன்னி காவேரி. எத்தனையோ ஆயிரம் மரங்களைக் கடந்து வந்திருந்தாலும் இந்தக் காவிரிப்பூம் பட்டினத்தில் தனக்காகக் காத்திருக்கும் அரசமரத்தினிடம் அவளுக்கு ஒரு தனி அன்பு உண்டு.

"என்ன தாத்தா, சௌக்கியமா?" என்று அளவற்ற வாஞ்சையோடு அவள் கேட்பதைக் கண்டே அந்த அரசமரம் பூரித்துப் போகும். இன்னும் கொஞ்சம் பலமாகத் தலையை ஆட்டிச் சருகுகளை உதிர்த்து மகிழும்.

"ஏண்டியம்மா! என் பாட்டன், முப்பாட்டனையெல்லாம் நீ பார்த்திருப்பாயே, இருந்தும் என்னைத் தாத்தா என்கிறாயே?" என்று அரசமரம் ஒரு கேள்வியைப் போடும். மனசுக்குள் என்னவோ காவேரி தன்னைத் தாத்தா என்று சொல்லிவிட்டதில் அதற்கு ரொம்பத் திருப்திதான்!

காவேரி புன்னகை புரிந்துவிட்டு, "ஆமாம் தாத்தா, எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். ஏன், கோவலனும் மாதவியும் கொஞ்சிக் குலவியதே என் மடியில்தானே?" என்று கம்பீரமாகப் பதில் சொல்வாள். இந்தக் குறும்பு மட்டும் அவளை விட்டுப் போகவேயில்லை என்று நினைத்துக் கொள்ளும் அரசமரம். ஆனாலும் அதன் மனக்கண் முன்னே காவேரிக் கரையில் குதித்து மகிழும் கோவலன் மாதவி போன்ற ஆயிரமாயிரம் காதலர்களின் உருவங்கள் வந்து நிற்கும். 'என்ன இருந்தாலும் இவள் கொடுத்து வைத்தவள்' என்று நினைத்துக் கொண்டே அவளைப் பார்த்து, "ஆமாம், நீ மட்டும் என்ன? இதோ கொஞ்ச நேரத்தில் உன் சமுத்திர ராஜனிடம் போய்க்

"கொஞ்சப் போகிறாய்!" என்று சொல்லி அரசமரம் அவள் வாயைக் கிளறும்.

சமுத்திர ராஜன் பெயரைக் கேட்டதுமே காவேரிக்கு நாணம் வந்துவிடும். சங்கமம் ஆகவேண்டிய இடம் அருகிலே யிருக்கிறது என்ற நினைவு வந்ததுமே அவள் உள்ளம் குளிர்ந்துவிடும்; நெஞ்சு துடிதுடிக்கும். "போ, தாத்தா! உனக்கு எப்போதும் பரிகாசம்தான்!" என்று சொல்லிக்கொண்டே ஓடிவிடுவாள்.

துள்ளிக் குதித்து அவள் ஓடும் காட்சியைக் கண் கொட்டாமல் பார்த்து நிற்கும் அரசமரம். எங்கேயோ மலைநாட்டில் பிறந்து, எங்கெல்லாமோ சுற்றி அலைந்துகொண்டு ஓடிவரும் அவள் சமுத்திர ராஜனைக் காணப் போகும் ஆவலைக் கண்டு அதற்குச் சிரிப்பு வரும். 'நல்ல பெண் இவள்!' என்று எண்ணி நகைக்கும்.

★

**நு**ரைத்து வரும் புதுப்புனலில் ஒரு தனிக் கவர்ச்சி உண்டு. அதைச் சூழ்ந்துவரும் காற்றிலே ஒரு குளுமை உண்டு. அதை அனுபவிப்பதில் தனியான ஒரு இன்பம் பிறக்கும். அதை ஒரு போதை என்றே சொல்லலாம். அரசமரம் அப்பொழுது அந்த இன்பப் போதையிலேதான் மூழ்கியிருந்தது. திடீரென்று மனிதர்கள் பேச்சுக் குரல் கேட்கவே அது கனவு கலைந்து உணர்வு பெற்றுத் திரும்பிப் பார்த்தது.

அரசமரத்தடியில் தங்கவேல் நாடார் நிற்கிறார். அவர் பக்கத்தில் அவருடைய சகாக்களான முதலியார், உடையார், தேவர் எல்லோரும் நிற்கிறார்கள். மற்றொருவரான பிள்ளையை இன்று காணோம். அவரையும் சேர்த்து 'ஐம்பெரும் வல்லரசுகள்' என்று சுற்று வட்டாரத்தில் உள்ளவர்கள் அழைத்து வந்தார்கள். சமீபத்தில் நடந்த தேர்தலில் தங்கவேல் நாடார் போட்டியில்லாமல் வெற்றி பெற்றுவிட்டார். எதிராக நின்றவர் ஒரு வாக்குறுதியை வாங்கிக்கொண்டு விலகிக் கொண்டாராம். அதன்படி காவேரிக் கரையில் நாடார் ஒரு படித்துறை கட்டவேண்டும், அவ்வளவுதான்! இந்த இரகசிய உடன்படிக்கை நாடாருக்கும் அந்த மாஜி எதிரிக்கும்தான் தெரியும். காவேரியையோ அல்லது அரசமரத்தையோ இந்த இரண்டு பிரமுகர்களும் கலந்து ஆலோசிக்காமலே முடிவுக்கு வந்துவிட்டார்கள். படித்துறை காவேரிக்கு; கட்டப்போவது அரச மரத்தை வெட்டிவிட்டு அதே இடத்தில்! ஆனால் சம்பந்தப்பட்ட இந்த மூவருக்கும் இருபத்துநான்கு மணி நேர நோட்டீசு கூடக் கிடையாது. இதைக் கேட்டு அரசமரம் அப்படியே 'மரமாக' நின்றுவிட்டது.

நாடார் கோஷ்டி அப்பால் நகர்ந்தது. மறுநாள் அரசமரம் இருந்த இடத்தில் படித்துறை — அதாவது, அரசமரத்துக்குக் கல் சமாதி எழும். இதை நினைக்க நினைக்க அரசமரத்துக்கு என்னவோபோல இருந்தது.

பொலபொலவென்று சருகுகளை உதிர்த்துக் கண்ணீர் விடும் அரச மரத்தைக் காவேரி ஆச்சரியத்தோடு பார்த்தாள். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அரசமரம் பெருமூச்சு விட்டு அங்கலாய்த்தது.

"பாரடியம்மா, இந்த மனுஷர்களுக்கு என்மேல் பொறாமையோ என்னமோ!

## அப்படியானால்....!





குடியானவன் மனைவி :— டாக்டர் ஐயா! எந்த மருந்து என் புருஷனுக்கு, எந்த மருந்து மாட்டுக்கு என்று நல்லாச் சொல்லிவிடுங்க!

டாக்டர் :— உன் புருஷனுக்கு அது தெரியும். மருந்தை மாற்றிச் சாப்பிட்டுவிட மாட்டான்.

குடியானவன் மனைவி :—மாட்டை உத்தேசித்துக் கேட்டேனுங்க. ஒன்று கிடக்க ஒன்று மாட்டுக்கு ஏற்பட்டுவிட்டால் எங்கள் பிழைப்பிலே மண் விழுந்து விடுமே!

---

‘வயசுப் பெண்ணோடு என்ன கும்மாளம் வேண்டிக் கிடக்கிறது இந்தக் கிழத்துக்கு?’ என்று நினைக்கிறார்கள் போலிருக்கிறது. நாளைக்கு என்னை அழித்துவிட்டு நான் நிற்கும் இடத்தில் ஒரு படித்துறை கட்டப் போகிறார்களாம். அப்புறம் உனக்கென்ன குறைச்சல்? உன்னைப்போல ஆயிரம் கன்னிப் பெண்கள் இங்கே வந்து உன்னோடு விளையாடுவார்கள். நீயும் இந்தக் கிழத்தை மறந்தே போய்விடுவாய்!” என்றது அரசமரம்.

மரத்தின் இந்தப் புலம்பலைக் கேட்டதும் காவேரிக்குச் சிரிப்புத்தான் வந்தது. “என் தாத்தா! வயசுதான் ஆயிடுத்தே, சாகறத்துக்குப் பயமாயிருக்கா, என்ன?” என்றாள் கேலியாகச் சிரித்துக்கொண்டே.

மரத்துக்கோ வேதனை அதிகமாயிற்று. “இல்லேடியம்மா! ஆறிலும் சாவு, நூறிலும் சாவுதான்! இருந்தாலும் உன் குறும்புச் சிரிப்பும், வேடிக்கைப் பேச்சும் கேட்க முடியாமற் போய்விடுமே! என்னமோ, எனக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் போலேயிருக்கு!” என்றது அரசமரம்.

அரசமரத்தின் சோகக் குரலும் அன்பும் காவேரியைக் கலக்கிவிட்டன. ஆனாலும் அவளுடைய வழக்கமான அந்த இளமுறுவல் அவளைவிட்டுப் போக மறந்தது.

“அம்மா பயப்படாதே, தாத்தா! இந்த மனுஷாளே இப்படித்தான்! அவர்களை மடக்கும் வழி எனக்குத் தெரியும். காலையிலே பாரேன், இவர்களையெல்லாம் உன்னை வந்து கும்பிட வைக்கிறேன். நீமட்டும் பேசாம இருக்கணும், என்ன?”

கண்ணைச் சிமிட்டிச் சிரித்துவிட்டுக் காவேரி தன் வழியே குதித்தோடிப் போனாள். அரசமரம் அசைவற்று நின்றது.

★

வாழவேண்டும் என்ற ஆசை அரசமரத்துக்கு உண்டு; அதை வாழவைக்கவேண்டும் என்ற ஆசை காவேரிக்கும் உண்டு. இடையில் வந்த இந்த மனிதக் கும்பல்தான் அழிவுக்குக் காரணம். மெதுவாக இந்தக் கும்பலைச் சரிப்படுத்த என்ன செய்வது என்ற எண்ணத்திலே மூழ்கி வந்துகொண்டிருந்த காவேரிக்குப் பக்கத்தில் கொஞ்ச தூரத்தில் சற்று மறைவான இடத்தில் — கவனிப்பாரற்று உட்கார்ந்திருந்த கல்லுப் பிள்ளையாரைக் கண்டதும் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது.

அந்தப் பிள்ளையார் எத்தனையோ காலமாக அங்கே இருந்தார். ஆனால் அவர் ஏகாந்தத்தைக் கலக்க யாரும் வருவதில்லை. தன்னந்தனியே—மனித வழிபாட்டுக்கு அப்பால்—அவர் மோனத் தவம் செய்துகொண்டிருந்தார். அவர் தெய்விகம் அந்த ஏகாந்த வெளியிலே அமுங்கிக் கிடந்தது. சில மேதைகளை உலகம் எப்படித் தெரிந்துகொள்ளாமல் இருக்கிறதோ, அதைப்போல அந்தச் சுற்றுப்புற மக்களும் மௌனப் பிள்ளையாரின் மகிமையை அறிந்துகொள்ளாமலே இருந்துவிட்டனர். ஆகவே அவர் அங்கேயே அந்தத் தனிமையில் அமர்ந்திருந்தார்.

காவேரி அவரை வலம் வந்து, பணிவாக நின்றாள். அவரும் அன்பாக, “என்ன காவேரி, சௌக்கியந்தானே?” என்றார். குறும்புக்காரக் காவேரி சற்றுத் தயங்கி நின்றபோதே அவருக்குத் தெரியும் ஏதோ விசேஷமிருக்கிறது என்று. ஆனால் காவேரி நேராக விஷயத்தைச் சொல்லவில்லை. “சுவாமி, நீங்கள் இருக்கும் வரை எங்களுக்கு என்ன குறை? இருந்தாலும் நீங்கள் இப்படி ஒருவரும் வராத இடத்தில் இருப்பதுதான் எனக்கு என்னவோ போலிருக்கிறது. உங்கள் சக்தியெல்லாம்

இந்த மக்களுக்குத் தெரியாமல், உபயோகப் படாமல் போய்விடுகிறதே!” என்று ஆரம்பித்தாள்.

பிள்ளையார் காவேரியின் பேச்சில் கவனம் செலுத்தினார்.

“ஆமாம் காவேரி, அதற்கு என்ன செய்யலாம்?” என்று கேட்டார்.

காவேரிக்குச் சந்தோஷம் பொங்கிற்று. அவள் நினைத்த காரியத்தை முடிக்கச் சரியான சமயம் இது என்று முடிவு கட்டினாள்.

“சுவாமி, கொஞ்ச தூரத்தில் ஒரு அரச மரம் இருக்கிறது. அதனடியில் நீங்கள் வந்து உட்கார்ந்துவிட்டால் உங்களுக்குப் பிரமாதமான பூஜை, நைவேத்யங்கள் எல்லாம் நடக்கும். அங்கிருப்பவர்கள் ரொம்பவும் தெய்வபக்தி யுள்ளவர்கள். உங்களை அவர்கள் பார்த்துவிட்டால் அலாதி மதிப்புக் கொடுப்பார்கள். காவேரிக்கரையும், அரசமரத்தடியும், அரசமரத்தடிப் பிள்ளையாரும் அவர்களுக்கு என்றும் நினைவைவிட்டு அகலாத ஒரு காட்சியாகி விடும். என்ன சொல்கிறீர்கள்? அங்கே வந்து விடுகிறீர்களா? இப்போதே உங்களைக் கொண்டு போய் அங்கே வைத்து அபிஷேகம் செய்து விடுகிறேன்!” என்றாள் காவேரி.

பிள்ளையார் ஒரு மௌனப் புன்னகை புரிந்து, தலை யசைத்தார்.

★

மறு நாள் காலை.

அரசமரத்தடியில் ஒரே கூட்டம். மரத்தை வெட்ட வந்த ஆட்கள் மரத்தடியிலிருந்த பிள்ளையாரைப் பார்த்ததும் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டார்கள்.

நாடார் வீட்டுக்கு விஷயம் எட்டியது. அவரும் அந்த அதிசயத்தைப் பார்க்க அங்கே வந்தார். கம்பீரமாக வீற்றிருக்கும் பிள்ளையாரைப் பார்த்ததும் அவர் ஒரு பெரிய கும்பிடு போட்டார். அரசமரத்துக்கு அளவற்ற ஆனந்தம். தன்னையே அந்த நாடார் வணங்குவதாக அதற்குத் தோன்றியது. உடனே அது தன் தலையை ஆட்டி இலைகளை யுதிர்த்தது, தேவர்கள் பொழியும் பூமாரி போல!

அன்று மாலைக்குள் அரசமரத்தடிப் பிள்ளையாருக்கு ஏக மதிப்பு ஏற்பட்டு விட்டது. ‘ஐம்பெரும் வல்லரசுகள்’ ஒன்று கூடி ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். அவர்களுடைய தீர்மானத்தின்படி அரசமரம் தப்பிப் பிழைத்தது. பிள்ளையாருக்கும் தினசரி பூஜைக்கு ஏற்பாடாயிற்று.

காவேரி கண் சிமிட்டிச் சிரித்தாள். அவள் புன்னகையைக் கண்டு அரசமரம் அப்படியே மயங்கிப் போய், “காவேரி, நீ ரொம்ப கெட்டிக்காரியம்மா! என்னை வாழ வைத்தாயே, நீ மகராஜியா யிருக்கணும்!” என்று மனமார வாழ்த்தியது.

அவள், “எல்லாம் பிள்ளையாரின் மகிமை, தாத்தா! அவர்தான் உன்னைக் காப்பாற்றினார்!” என்று சொல்லிவிட்டுத் துள்ளிக் குதித்தோடிப் போனாள். “போடியம்மா, போ! கிழவனைப் பார்த்தால் உனக்குப் பிடிக்குமா? சமுத்திர ராஜனைக் காண ஓடற ஓட்டத்தைப் பார்!” என்று சொல்லிக் குலுங்க நகைத்தது அரசமரம்.

குறும்புக்காரி காவேரி ஓடோடியும் சென்று சமுத்திர ராஜனோடு என்னவோ ரகசியம் பேசினாள். பிறகு இருவரும் சேர்ந்து சிரித்தார்கள். அவர்களுடைய சிரிப்பொலி அலையோசையோடு காற்றில் மிதந்து அரசமரத்திடம் வந்தது.

“மகராஜி, என்றும் இப்படியே அவள் குதூகலமாயிருக்க வேண்டும்!” என்று இதய பூர்வமாய் கீழே யிருக்கும் பிள்ளையாரிடம் வேண்டிக் கொண்டது அந்த அரச மரம்.

அவரும் அன்பு கூர்ந்து ஆசி கூறி, அரச மரத்தின் ஆனந்த ‘இலைக் கண்ணீரை’ப் புஷ்பமாரியாக ஏற்றுக் கொண்டார்!



திருநெல்வேலிக்கு அடுத்த பேட்டையில் பெண்கள் பாடசாலை நடத்துவதற்கு ரூ. 2,000 நன்கொடை உதவிய ஸ்ரீ சங்கர நாராயண மூப்பனார்.



# விச்சுவைக் கேளுங்கள்!

விஜயம்

விச்சு ரொம்பப் புத்திசாலி. எந்தக் கேள்வி கேட்டாலும் பொருத்தமாகவும் புத்திசாலித்தனமாகவும் பதில் சொல்லுவான். சிரிக்கவே மாட்டேன் என்று விரதம் எடுத்துக் கொண்டிருக்கும் 'உம்மணா மூஞ்சிகள்' கூட விச்சுவிடம் பேச்சுக் கொடுத்தால் கட்டாயம் சிரித்து விடுவார்கள்.

அவன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒருவர் இருந்தார். அவருக்குக் குழந்தைகளைக் கண்டாலே கொஞ்சமும் பிடிக்காது. அதுவும் விச்சுவைப்போல் விஷமம் செய்கிறவர்களைக் கண்டால் அவருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வரும்.

ஒரு நாள் விச்சு அவரிடம் போய், "மணி என்ன ஆகிறது, மாமா?" என்று கேட்டுத் தொந்தரவு செய்தான். அவருக்குக் கோபம் வந்து விட்டது. விச்சுவைப் பிடித்துக் கொண்டு முதுகில் ஒரு அடி வைத்து, "ஒரு மணி ஆகிறது, போ!" என்றார்.

"நல்ல வேளை, மாமா! உங்களை ஒரு மணிக்கு முன்னால் வந்து, 'மணி என்ன, மாமா?' என்று கேட்காமல் இருந்தேனே! அவ்வாறு கேட்டிருந்தால் என் முதுகில் பன்னிரண்டு அடியல்லவா கொடுத்திருப்பீர்கள்!" என்று சொல்லிவிட்டு ஓடினான். அதைக் கேட்டதும் அந்தக் கோபக்கார மாமாகூடச் சிரித்துவிட்டார்!

விச்சு அன்றைக்கு வெகு நேரம் பந்து விளையாடிக் கொண்டிருந்தான். அவன் சுவாரஸ்யமாக விளையாடிக் கொண்டிருந்த சமயத்தில் பந்து பக்கத்து வீட்டுக்குள்ளே போய் விழுந்து விட்டது. விச்சுவுக்குப் பந்தை எப்படி' எடுத்துக்கொண்டு வருவது என்று புரியவில்லை. பக்கத்து வீட்டு மாமாவோ கோபக்காரர். அந்த வீட்டு அம்மாமிக்குக் குழந்தை இல்லை. விஷமம் செய்வதற்கு அந்த வீட்டில் யாருமே கிடையாது. அவர்கள் வீட்டில் எல்லாச் சாமான்களும் ஒழுங்காக, வைத்தது வைத்தபடி இருக்கும். அங்கிருக்கும் நாற்காலியைக் கொஞ்சம் ஓரமாகத் தள்ளிப் போட்டுவிட்டால் கூட அந்த அம்மாமிக்கும் மாமாவுக்கும் கோபம் வந்து விடும். விச்சுவுக்கோ விஷமம் பண்ணாமல் இருக்க முடியாது. அடிக்கடி ஏதாவது விஷமம் செய்து விட்டு விச்சு அவர்களிடம் வசவும் அடியும் வாங்கி யிருக்கிறான்.

ஆனால் அன்றைய தினம் விச்சுவுக்குப் பக்கத்து வீட்டினுள்ளே போய் அம்மாமியிடம் தன் பந்தைக் கேட்கத் தைரியம் வரவில்லை. ஏனென்றால் தன் பந்து விழுந்திருக்கும் இடம் அவனுக்கு நன்றாய்த் தெரியும். அதை அம்மாமியிடம் சொன்னால்......!

மெதுவாக விச்சு பக்கத்து வீட்டுக்குள் போனான். நல்ல வேளையாக

அந்த மாமா இல்லை. உடனே அவனுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. சமையல் அறைக்குச் சென்றான். பயமும் மரியாதையும் கலந்த குரலில், "அம்மாமி!" என்று கூப்பிட்டான்.

அம்மாமி வெளியே வந்தாள். விளையாடி வியர்த்து விறுவிறுக்கும் முகத்துடன் அடங்கி ஒடுங்கி நிற்கும் விச்சுவைக் கண்டதும் அந்த அம்மாமிக்கு அவன் விஷமக்கார விச்சு என்பதே மறந்துபோய் விட்டது. அவன் அருகில் வந்து அவனை அணைத்துக்கொண்டு, "என்னடாப்பா, விச்சு!" என்று அன்போடு கேட்டாள்.

உடனே விச்சு முகத்தில் இன்னும் பயத்தை வரவழைத்துக் கொண்டு, "அம்மாமி, வாசலிலே பந்து விளையாடிக் கொண்டிருந்தேன். அது உங்கள் வீட்டுக்குள்ளே வந்து விழுந்து விட்டது. அதை எடுத்துக்கணும்!" என்று கெஞ்சினான்.

அம்மாமி அன்புடன், "எடுத்துக் கொள்ளேண்டா, என் கண்ணே! அது எங்கே விழுந்திருக்கிறது?" என்று கேட்டாள்.

"அம்மாமி, அந்தப் பந்து நானாகப் போய் எடுத்துக் கொள்ளும்படியான இடத்திலே விழவில்லை......!" என்று சொல்லித் தயங்கினான் விச்சு.

"பந்து விழுந்த இடத்தைக் காட்டு! நான் எடுத்துத் தருகிறேன், வா!" என்று கூறி, விச்சுவின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு கூடத்துக்கு வந்தாள் அம்மாமி.

அங்கே கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. "ஏண்டா, விச்சு! பந்து ஜன்னல் வழியாக உள்ளே வந்து கண்ணாடியை உடைத்துக்கொண்டு பீரோவுக்குள்ளே யல்லவா விழுந்திருக்கிறது!" என்று அலறினாள்.

"அம்மாமி, பீரோவை நான் உடைக்கவில்லை. நீங்கள் கவனிக்காமல் என்மேலே குற்றம் சுமத்துகிறீர்கள். நான் போட்ட பந்து பீரோக் கண்ணாடியை உடைத்திருந்தால் உடைந்த கண்ணாடித் துண்டுகள் எங்கே? ஆகையினால் அது முன்னாலேயே உடைந்திருக்க வேண்டும்!" என்றான் விச்சு, சாமர்த்தியமாக.

அம்மாமி கீழே பார்த்தாள். ஒரு கண்ணாடித் துண்டையும் காணவில்லை. ஆகவே அவன் சொன்னது சரியென்றே பட்டது அவளுக்கு. உடனே அவள் பீரோவுக்குள் இருந்த பந்தை எடுத்து விச்சுவினிடம் கொடுத்து விட்டாள். விச்சு பந்தை எடுத்துக் கொண்டு பிடித்தான் ஓட்டம்!

ஏற்கெனவே அவன் உடைந்த கண்ணாடித் துண்டுகளை எடுத்து வெளியே போட்டுவிட்டுத் தன்னிடம் வந்த விஷயம் அம்மாமிக்குக் கடைசி வரை தெரியவேயில்லை!

## இரகசியம்!



மனைவி:—எதற்காக இந்தப் புழுக்கத்திலே போர்த்திக்கொண்டு வெளியிலே கிளம்புகிறேள்? ஷர்ட்டு வேறே போட்டுண்டு!

கணவன்:—உம்! இதோ பார்த்தியா? எதற்காகப் போர்த்திக்கொண்டு புறப்படுகிறேன் என்று இப்போது தெரிகிறதா?

# வெள்ளிச் சிலம்பு

வெங்கடலக்ஷ்மி

ஒரு கையில் சிறிய எண்ணெய்க் கலயத்துடனும், மடியில் கட்டிய வெற்றிலை, பாக்கு, புஷ்பத்துடனும் ஆலம்பேட்டைக்குப் பக்கத்திலிருந்த கன்னியம்மன் கோயிலை நோக்கிப் போய்க் கொண்டிருந்தாள் முத்தாயி. அவளுடைய மனதின் வேகத்தைப் போலவே நடையின் வேகமும் விறுவிறுப்பாயிருந்தது.

மில் தொழிலாளியான குமரேசனின் மனைவி அவள். நல்ல கட்டழகி; சுழலும் கருவிழிகளில் யாரையும் மயக்கக்கூடிய சக்தி; நல்ல சிவப்பு நிறம்; கொடிபோல் துவளும் சரீரம்; தலையில் அலையலையாய் அடர்ந்திருந்த கூந்தலை வாரி முடித்துக் கொண்டை போட்டுக் கொண்டிருந்தாள். நெற்றியில் பளிரென்று குங்குமம் மின்னிக் கொண்டிருந்தது. அவளுடைய தளதளத்த கன்னங்களில் பசுமஞ்சளின் ரேகை படர்ந்திருந்தது. கழுத்தில் தாலிச் சரட்டுடன் பின்னிப் பிணைந்திருந்த கருமணிச் சரத்தையும் பவளமாலையையும் அணிந்திருந்தாள்.

சுமாராக இருட்டிவிட்டது. கோயிலையடைந்து அம்மனின் சிலையை நெருங்கினாள் முத்தாயி. பக்கத்தில் எரிந்து கொண்டிருந்த கல் விளக்கின் திரியைத் தூண்டிப் பிரகாசப்படுத்திவிட்டு, தான் கொண்டுவந்திருந்த எண்ணெயை விளக்கில் வார்த்தாள். பிறகு அம்மனின் சிலைக்குப் புஷ்பம் சாத்திக் கற்பூரம் காட்டிவிட்டுப் பயபக்தியுடன் நமஸ்கரித்தெழுந்தாள்.

"முத்து! ஏ, முத்தாயி!" என்று யாரோ கூப்பிடுவது கேட்டு நின்றாள். அழைத்தது அவள் தோழி அஞ்சலை.

"முத்து! உனக்கு விசயம் தெரியுமா?" என்று அஞ்சலை கேட்டாள்.

"என்னாது? எனக்கு ஒண்ணுமே தெரியாதே!" என்றாள் முத்தாயி.

"அவுகளெல்லாம் இன்னிக்கு மில்லிலிருந்தே நாடகம் பார்க்கப் புதுச்சேரிக்குப் போயிட்டாங்களாம்; ராத்திரி வீட்டுக்கு வரமாட்டாங்களாம். அப்படின்னு என்ன அர்த்தம்?—உனக்குத் தெரியுமில்லே?"

பகீரென்றது முத்தாயிக்கு; அஞ்சலையின் கடைசி கேள்விக்கு வெறிச்சோடிய பார்வையுடன் தலையசைத்தாள் அவள்.

கூத்துப் பார்க்கப் போனவர்கள் திரும்பி வரும் நிலைமை அவளுக்குத் தெரியும். மறுநாள் சனிக்கிழமை சூரியகிரகணம் என்பதற்காக மில்லில் வேலை செய்பவர்களுக்கு விடுமுறை வேறு இருந்தது. அதற்கு முன் தினமான வெள்ளிக்கிழமையே வாரச் சம்பளமும் கிடைத்திருக்கும். புதுச்சேரியில் நாடகம் பார்த்துவிட்டுக் கள்ளுக் கடைக்குள் நுழைந்து......சரிதான், இந்த வாரமும் முழுப் பட்டினிதான் ......!

முத்தாயியின் உடம்பெல்லாம் குபீரென்று வியர்த்தது. அப்படியே அசந்துபோய் அங்கிருந்த ஒரு கல்லின்மீது இடுப்பைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டாள்.

## 2

முத்தாயியின் கணவன் குமரேசனுக்கு 'வேலப்பா மில்ஸ்' என்னும் பஞ்சாலையில் வேலை. வீட்டில் மனைவியைத் தவிர வேறு யாரும் கிடையாது. ஆலம்பேட்டை கிராமத்தில் சிறிய மனையுடன் கூடிய ஓர் ஓட்டு வீடும் இரண்டொரு மாடு, கன்றுகளும் அவர்களுக்கு உண்டு. முத்தாயியைக் கல்யாணம் செய்துகொண்ட இரண்டு வருடங்கள் வரை எல்லாம் ஒரே ஆனந்தமயமாய்த்தான் இருந்தது. வாரச் சம்பளத்தைக் குமரேசன் அப்படியே தன் மனைவியிடம் அளித்துவிடுவான். முத்தாயி செட்டும் கட்டுமாய்க் குடித்தனம் செய்வாள். குமரேசனுக்கு வேளைக்கு வேளை நல்ல சாப்பாடு, நிலைமைக்குத் தகுந்தபடி நல்ல துணிமணிகள் எல்லாம் முத்துவின் சாமர்த்தியத்தினால் கிடைத்துவந்தன. அக்கம் பக்கத்தில் மாதச் சீட்டு வேறு பிடித்து, தங்கக்காப்பு, அட்டிகை, காலுக்கு வெள்ளிச் சிலம்பு எல்லாம் செய்து போட்டுக்கொண்டாள்.

குமரேசன் சாயந்திரம் வேலையிலிருந்து திரும்பும்பொழுது முத்தாயி தனது வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு, தலை வாரிக் கொண்டையிட்டுச் சிவக்க வெற்றிலைப் பாக்குப் போட்டுக்கொண்டு வாசலில் வந்து நின்று கொண்டிருப்பாள்.

குமரேசன் வந்ததும் 'கலீர், கலீர்' என்று கால்சிலம்பும் மெட்டியும் ஒலிக்க வீட்டுக்குள் வந்து அவனுக்கு முகம் கழுவ ஜலம்

கொடுப்பான். அந்நிலையில் தன்னையே மறந்து இன்பத்தில் ஆழ்ந்து விடுவான் குமரேசன்.

இப்படியெல்லாம் ஒரே ஆனந்தமயமாயிருந்த அவர்கள் வாழ்க்கை திடீரென்று தலைகீழாய் மாறியது எல்லாருக்குமே ஆச்சரியமாயிருந்தது. காரணம் பட்டணத்திலிருந்து ஆலம்பேட்டை மில்லுக்குப் புதிதாய் வந்து சேர்ந்த ஒரு தொழிலாளி குமரேசனுக்குச் சிநேகமானதுதான். அவன் பெயர் சுப்பையா. சிங்கப்பூர், பினாங்கு முதலிய இடங்களுக்கெல்லாம் சென்று வாழ்க்கையின் பல துறைகளிலும் அனுபவம் பெற்றவன் அவன். அவனுடைய தொடர்பு ஆரம்பமானதிலிருந்து குமரேசன் அடியோடு மாறிவிட்டான். வாரத்துக்கு ஒருமுறை இருமுறை சுப்பையாவுடன் புதுச்சேரிக்குப் போய் நாடகம், சினிமா, அடுத்தாற்போல் கள்ளுக்கடை எல்லாவற்றையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு வந்தான்.

இதனால் எல்லா நகைகளும் போய்க் கடைசியில் முத்தாயி ஆசையோடு செய்து போட்டுக் கொண்டிருந்த வெள்ளிச் சிலம்பு மட்டும் மிஞ்சியிருந்தது. அதையும் கழற்றிக் கொடுத்துவிடும்படியாக அவளை அடித்தும் உதைத்தும் இம்சைப் படுத்தினான் குமரேசன். முத்து அந்த வெள்ளிச் சிலம்பைக் கொடுக்கக் கண்டிப்பாய் மறுத்துவிட்டதுடன், அதை எங்கேயோ ஒளித்தும் வைத்து விட்டாள்.

## 3

அன்று வாசற்கதவைத் தாளிட்டுக்கொண்டு உள்ளே வந்த முத்தாயி, சமையலறையின் ஒரு மூலையிலிருந்த பழைய கள்ளிப் பெட்டியைத் திறந்து, அதிலிருந்த தட்டுமுட்டுச் சாமான்களையெல்லாம் எடுத்து வெளியே வைத்தாள். பிறகு பெட்டிக்குள் கைவிட்டுக் கந்தைத் துணியில் முடிந்து வைத்திருந்த வெள்ளிச் சிலம்பைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு கண் கொட்டாமல் பார்த்தாள். குமரேசன் வீட்டுக்கு வந்து அன்றுடன் மூன்று நாட்களாகிவிட்டன. அழுது அழுது முத்தாயியின் கண்களெல்லாம் வீங்கிக் கிடந்தன. அன்று முழுதும் அவள் பச்சைத் தண்ணீர் கூடக் குடிக்கவில்லை. சற்றுப் பொறுத்து மீண்டும் அந்தச் சிலம்பை அவள் கந்தைத் துணியில் வைத்துக் கட்டிக் கையில் எடுத்துக்கொண்டு ஆவேசம் வந்தவளைப்போல் கண்ணகியம்மன் கோயிலை நோக்கி நடந்தாள்.

முத்தாயி கோயிலை அடைந்தபொழுது நன்றாய் இருட்டிவிட்டது. வழக்கம்போல் அந்த ஒரே விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. விறுவிறென்று உள்ளே நுழைந்த முத்தாயி, "ஏ, கண்ணகியம்மா! உன் புருஷன் மேல் பொய்க்குற்றம் சாட்டி, அவனைத் தண்டிக்கச் செய்த ஒரு தட்டானுக்காக நீ அந்த மதுரையையே எரிச்சுப்போட்டுவிடவில்லையா? என் புருசனைத் திருத்திப் பழையபடி என்னிடம் கொண்டு வந்து சேர்க்கிறது உனக்கு ஒரு கஷ்டமா? என் தாயே! இங்கேயே, உன் சன்னிதியிலேயே நான் மூன்று நாள் பட்டினி கிடக்கப் போறேன்; அதுக்குள்ளே என் புருசன் மனம் திருந்தி என்னிடம் திரும்பிவராட்டி, இந்த வெள்ளிச் சிலம்பு ரெண்டையும் உடைச்சி, அதிலேயிருக்கிற பரலையெல்லாம் விழுங்கிப் பிராணனை விட்டுடறேன்! இது நிச்சயம்!" என்று உரத்த குரலில் கத்திவிட்டு, அவள் அங்கேயே படுத்துவிட்டாள்.

* * *

அதே சமயம் புதுச்சேரியில் நாடகம் பார்த்துவிட்டுக் கடற்கரை மணலில் துணியை விரித்துப் படுத்திருந்தான் கும






"என்ன ஐயா, இந்தக் காலத்தில் யார் உம்முடைய தைலத்தை வாங்கப் போகிறீர்கள்? ஏன் வீணாய் அலைகிறீர்?"

"நன்றாயிருக்கிறதே! என் தைலத்தை யாரும் வாங்காவிட்டால் தைலத்தின் பெயரையே மாற்றி வைத்துவிடுகிறேன், பாருங்கள்!"

---

ரேசன். அவன் பக்கத்தில் சுப்பையா உட்கார்ந்திருந்தான்.

வானத்தில் மின்னிய தாரகைகளையும், சற்றுத் தூரத்தில் கரையில் வந்து மோதி மோதித் திரும்பிச்சென்ற அலைகளையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்த குமரேசனின் மனத்தில் அன்று ஏனோ நிம்மதியில்லை.

ஆலம்பேட்டையிலிருந்து அவன் புதுச்சேரிக்கு வந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. பாவம், முத்தாயி என்ன செய்கிறாளோ! — வெள்ளியன்று சாயந்திரம் வாரக் கூலி வாங்கிக்கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டு வந்தோமே, இப்பொழுது ஊருக்குத் திரும்பிப் போகக்கூடப் பணமில்லையே! இந்த வெட்கக் கேட்டை யாரிடம் போய்ச் சொல்லுவது? எல்லாம் இந்தப் பாழும் சுப்பையாவால் வந்தது! இவனுடைய சிநேகம்தான் இதற்கெல்லாம் காரணம். சீ! இனிமேல் இவனுடைய தொடர்பை அடியோடு விட்டுவிடவேண்டும். இவன் வருவதற்கு முன்னால் நம் குடும்பம் எவ்வளவு ஆனந்தமாய் நடந்து கொண்டிருந்தது!— மகாபாவி! எங்கிருந்தோ என் குடியைக் கெடுக்க வந்து சேர்ந்தானே!

இப்படியெல்லாம் எண்ணி யெண்ணி அலைபாய்ந்து கொண்டிருந்தது அவன் மனம். சற்று நேரம் பொறுத்து ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே எழுந்து உட்கார்ந்தான்.

அவனைத் திரும்பிப் பார்த்த சுப்பையா, "என்ன குமரு? போகலாமா?" என்று கேட்டான்.

"எங்கே போகிறது? நான் எங்கும் வருகிறதாயில்லை; இங்கேயே படுத்திருந்து விட்டு நாளைக் காலை ஆலம்பேட்டைக்குப் போய்விடுகிறேன்!" என்றான் குமரேசன்.

சுப்பையாவுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. "குமரு! என்ன சொல்லுறே நீ?" என்று கேட்டான்.

"ஒண்ணும் சொல்லவில்லை; இனிமேல் உனக்கும் எனக்கும் ஒரு உறவும் வேண்டாமென்றுதான் சொல்கிறேன்!" என்று தன் ஆத்திரத்தைக் கொட்டினான் குமரேசன்.

சுப்பையாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "ஐயாவுக்கு எப்போபுடிச்சு நல்ல புத்தி வந்திடிச்சி? ஆலம்பேட்டைக்குப் போக வண்டிச் சத்தம்கூட இந்தச் சுப்பையாதான் கொடுக்கணுங்கிறது நினைவிருக்கட்டும்!" என்றான்.

"சீ, ஜாஸ்தி பேசாதே! உன்னைப் பார்த்துக்கிட்டுத்தான் இந்தக் குமரு உயிரோடிருக்கானா? ஆலம்பேட்டைக்குப் போகிற வித்திலே நான் போய்க்குவேன்!" என்றான் குமரேசன்.

சுப்பையா வாயடைத்துப் போனான். அவன் குமரேசனை ஒருதரம் முறைத்துப் பார்த்து விட்டு ராஜபாட்டையை நோக்கி நடந்தான்.

## 4

மாலை இருட்டும் தருணம். கன்னியம்மன் கோயிலில் பூசாரி வந்து விளக்கைக் கொளுத்தினான். தன்னுடைய வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு, கோயிலின் கதவை வெளியில் இழுத்துச் சாத்திக் கொண்டு, அவன் தன் வீட்டுக்குப் போய் விட்டான்.

எங்கும் நிச்சப்தம் நிலவியது. சுமார் அரை மைலுக்கப்பாலிருந்த ஆலம்பேட்டைப் பஞ்சாலையில் ஏழு மணிச் சங்கு அலறி எதிரொலியிட்டது.

"ஏ! கன்னியம்மா!" என்று உரத்த குரலில் கூவியபடி தலைவிரிகோலமாய்க் கோயிலுக்குள் நுழைந்தாள் முத்தாயி. அவள் கண்களும் முகமும் சிவந்திருந்தன. தன்னுடைய இரண்டு கைகளிலும் அவள் இரண்டு

வெள்ளிச் சிலம்புகளை வைத்துக் கொண்டிருந்தாள். அம்மனின் சிலையெதிரில் வந்து நின்று அவள் ஏதோ முணுமுணுத்தாள். சிலம்புகளைக் கையில் பிடித்து இப்படியும் அப்படியும் குலுக்கினாள். மீண்டும் கோயிலுக்கு வெளியே வந்து அங்கிருந்த ஒரு பாறையின் மீது உட்கார்ந்தாள்.

அரை மணி நேரம் சென்றது. 'பட் பட்' என்ற சத்தம். முத்தாயி தன்னுடைய சிலம்புகளை அந்தப் பாறையின்மேல் வைத்து நறுக்கிக் கொண்டிருந்தாள்.

அதே சமயத்தில், "முத்து! ஏ, முத்து! என்ன காரியம் செய்யறே, நீ?" என்று கூவியபடி, எங்கிருந்தோ ஓடி வந்து அவளுடைய கைகளை இறுகப் பிடித்துக் கொண்டான் குமரேசன்.

திரும்பிப் பார்த்த முத்தாயி பிரமை பிடித்தவள் போல் அவனை ஒரு கணம் உற்று நோக்கினாள். அடுத்த கணம் நசுங்கிப்போன சிலம்புகளைத் தலைக்குமேல் சுழற்றி வீசி எறிந்துவிட்டு அவள் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தாள். அவள் கண்களில் தீப்பொறி பறந்தது. குமரேசன் நடுங்கிப்போனான்.

"முத்தாயி! ஏ! முத்தாயி!"

குலுங்கும் உடலுடன் தன் கணவனின் தோளில் சாய்ந்துவிட்டாள் முத்தாயி.

• • •

எட்டு நாட்களுக்குப் பிறகு நல்ல நிலவொளியில் வாசற்பக்கம் போட்டிருந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து, கணவனுடன் பேசிக்கொண்டிருந்தாள் முத்தாயி.

"நிஜமாச் சொல்றேன், முத்து! அன்னைக்கு உன்னைப் பார்த்தப்போ நான் ரொம்ப பயந்து போய்விட்டேன். நான் செய்த தப்புக்கெல்லாம் அந்தக் கண்ணகியம்மாவே என்னைச் சோதிச்சுவிட்டதா நினைச்சுப்புட்டேன்!" என்றான் குமரேசன்.

"கண்கண்ட தெய்வமில்லையா, கண்ணகி? எப்படியோ உன்னைத் திருத்தி, அந்தப் படுபாவி சப்பையாகிட்டயிருந்து உன்னைப் பிரித்து என்னண்டை கொண்டுவந்து சேர்த்தாளே, அதைச் சொல்லு!" என்றாள் முத்தாயி.

குமரேசன் அளவில்லாச் சந்தோஷத்துடனும் நன்றியறிதலுடனும் அவளை நோக்கினான். முத்தாயி மலர்ந்த முகத்துடன் தன் கணவனைப் பார்த்தாள்.

# காலக்ஷேபம்

**மனைவி:**—ஏன் இந்தக் கிழிந்த ஜிப்பாவையே போட்டுக்கொண்டு போகிறீர்கள்? யாராவது ஒரு தையற்காரனிடம் ஓரணா கொடுத்துத் தைத்துத் தரச் சொல்லிப் போட்டுக் கொள்ளக் கூடாதோ?

**புருஷன்:**—அது எனக்குத் தெரியாதா? கிழிசலாக இருந்தால் இப்பத்தான் கிழிந்திருக்கும் என்று நினைத்துக் கொள்வார்கள்; தைத்துப் போட்டுக் கொண்டாலோ 'தரித்திரம் பிடித்த பயல் போலிருக்கு!' என்று நினைத்துக் கொள்வார்கள்!

★

**புது மனைவி:**—நீங்கள் என்னைப் பணத்துக்கு ஆசைப்பட்டுத்தான் கல்யாணம் செய்து கொண்டீர்கள் என்று சரஸ்வதி மாமி சொன்னாளே, அது நிஜமா?

**புருஷன்:**—அவள் கிடக்கிறாள், கால்காசு கூட இல்லாத அஷ்ட தரித்திரம்! அவள் பெண்ணை நான் கலியாணம் செய்துகொள்ளவில்லை என்ற பொறாமையில் அப்படிச் சொல்லுகிறாள்; நீ அதை நம்பாதே!

**கோபாலன்:**—ஏண்டா ராமு, 'புஸ்தகம் வாங்கணும், பணம் அனுப்பு' என்று அப்பாவுக்கு நீ கடிதம் எழுதியிருந்தாயே, ஏதாவது அனுப்பினாரா?

**ராமு:**—இல்லேடா, புஸ்தகத்தையே வாங்கி அனுப்பித் தொலைத்து விட்டார்!

★

"இந்த மோட்டாரை எனக்கு நீ விற்றபோது எது உடைந்து போனாலும் போட்டுத் தருவதாகச் சொன்னாயல்லவா?"

"ஆமாம், என்ன உடைந்து விட்டது?"

"என் முழங்காலும் முழங்கையும் ஒடிந்து விட்டன!"

★

**பருத்த மனிதர்:**—என்னை அந்தப் பயல் சதா 'தடியன், தடியன்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான்......!

**நண்பர்:**—சொல்லிவிட்டுப் போகிறான், போங்கள்! நீங்களும் அப்படி ஒன்றும் இளைத்தவராகத் தோன்றவில்லையே!

# இலங்கையில் காந்தி கிராமம்

ரஜனி

கொழும்பு, 27—3—49

இலங்கையில் மகாத்மா காந்திக்கு எந்த விதமான ஞாபகச் சின்னத்தை அமைப்பது என்பதைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக இலங்கை இந்தியர் காங்கிரஸ் ஒரு மகாநாட்டைக் கூட்டியது. வார்தா கல்வித் திட்டத்தை இலங்கையில் ஆரம்பித்து வைப்பதற்காக இங்கு வந்திருக்கும் ஸ்ரீ ஜி. ராமச்சந்திரனுடன் இந்தியத் தலைவர்கள் கலந்து பேசினார்கள். இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரி, அவருடைய காரியதரிசி ஸ்ரீ என். இ. எஸ். ராகவாச்சாரி ஆகியோரும் மகாநாட்டுக்கு வந்திருந்தனர்.

## ஐரோப்பியரின் பக்தி

மகாத்மா காந்தியின் ஆத்மா ஏழை எளிய ஜனங்களிடையே சஞ்சரிக்கிறதென்றும், காந்தியடிகளுக்கு மிகவும் பிடித்தமானது கிராம சேவைதானென்றும், இதை உத்தேசித்து மகாத்மா காந்தி கிராமம் என்ற பெயரில் சேவாகிராமத்தைப் போன்ற ஒரு கிராமத்தை ஏற்படுத்த வேண்டுமென்றும் ஸ்ரீ ராமச்சந்திரன் சொன்னார். கிராமத்தின் சகல அம்சங்களும் காந்தியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டுமென்றும் அவர் கூறினார். இந்த யோசனையை மகாநாடு ஒப்புக்கொண்டு ஒரு திட்டம் தயாரித்துக் கொடுக்கும் பொறுப்பை ஸ்ரீ ராமச்சந்திரனிடம் ஒப்படைத்திருக்கிறது.

காந்தி ஞாபகார்த்த கிராமத்தை ஸ்தாபிக்க சுமார் பத்து லட்சம் ரூபாய் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. டிக்கோயாவைச் சேர்ந்த ஒரு ஐரோப்பிய தோட்ட முதலாளி எவரும் கேட்காமல் தாமாக வலுவில் ரூ. 173-க்கு ஒரு 'செக்' அனுப்பி வைத்திருக்கிறார். காந்தி ஞாபக நிதிக்கு முதலாவது நன்கொடை ஒரு ஐரோப்பியரிடமிருந்து வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. நான்கு மாத காலத்திற்குள் நான்கு லட்சம் ரூபாய் வசூல் செய்து கொடுப்பதாகத் தோட்ட முதலாளிகள் சம்மேளனம் இந்திய காங்கிரஸுக்கு உறுதி கூறியிருக்கிறது.

## கல்விச்சாலையில் வேற்றுமை

தாழ்த்தப்பட்ட சிங்களவர்களான ரோடியா வகுப்பினரை, கொண்டகொல்லை கிராமப் பள்ளிக்கூடத்தில் சேர்த்ததினால் ஏற்பட்ட நெருக்கடியை இலங்கை அரசாங்கம் சமாளித்த முறை மிகவும் நேர்மையானது. "ஜாதி இந்துக்களானாலும் சரி அல்லது ஜாதிச் சிங்களவர்களானாலும் சரி, தாழ்த்தப்பட்டவர்களுக்குச் சமமாகவே எல்லோரையும் நடத்துவோம். இதில் பாரபட்சத்துக்கு இடமே கிடையாது" என்று அரசாங்கம் ஓர் அறிக்கையை விடுத்தது. அத்துடன் நின்றுவிடவில்லை. பள்ளிக்கூடத்தில் படிக்கும் வயதுவந்த மாணவர்களைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாமல் வைத்திருப்பது இலங்கைக் கல்விச் சட்டத்தின்படி தண்டிக்கப்படவேண்டிய குற்றமாகும். அரசாங்கம் இதையும் சுட்டிக்காட்டி ரோடியா வகுப்பு மாணவர்கள் படிக்கும் பள்ளிக்கூடத்துக்குக் குழந்தைகளை அனுப்ப மறுக்கும் பெற்றோர்கள்மீது கோர்ட்டில் வழக்குத் தொடரப்படுமென்றும் கண்டிப்பாக அறிவித்தது. இதன்பயனாக ஜாதிச் சிங்களவர்கள் பிடிவாதத்தைக் கைவிட்டுத் தங்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப ஆரம்பித்து விட்டார்கள்.

## தொழிலாளர் கண்ணீர்

கரும்புத் தோட்டத்தில் இந்தியத் தொழிலாளர் கண்ணீர் வடிப்பதைப் பற்றி அமரகவி பாரதியார் அன்று எழுதியதை இன்றும் இலங்கைத் தேயிலை ரப்பர் தோட்டங்களில் நடக்கும் சில சம்பவங்கள் நமக்கு ஞாபகமூட்டுகின்றன. சில தினங்களுக்கு முன்னால் தேயிலைத் தோட்டமொன்றில் ஒரு தொழிலாளியைத் தோட்ட அதிகாரி இரக்கமின்றி அடித்து விட்டாராம். அந்தத் தொழிலாளி நடக்கவும் நிற்கவும் சக்தியில்லாமல் வீட்டுக்குப் போய்ப் படுத்த பிறகு அவரை டிஸ்மிஸ் செய்திருப்பதாகத் தோட்ட அதிகாரி நோட்டீஸ் கொடுத்து விட்டார். தம்முடைய நிலைமையை அந்தத் தொழிலாளி லேபர் கமிஷனருக்கும் இலங்கை இந்திய காங்கிரஸுக்கும் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்.

# வந்து விடுகிறேன்!


நாளைக்குச் சாயங்காலம் நான் கோகலே ஹாலில் பிரசங்கம் செய்யப் போகிறேன். நீங்கள் அவசியம் வந்து கேட்கணும்!
உம்ம், பார்க்கலாம்!
1


பார்க்கலாம் என்று சொல்லக் கூடாது! கட்டாயம் வந்து என் பிரசங்கத்தைக் கேட்கணும்.
நாளைக்கு கொஞ் - சம் வேலையிருக்கே என்று யோசிக்கிறேன்.
2


நீங்கள் அப்படி சொல்லக் - கூடாது. என் பிரசங்கத்தில் ரொம்ப கஷ்டப்பட்டு நல்ல நல்ல 'ஐடியாக்களெல்லாம் சேர்த்திருக்கிறேன்.
உ.ம்.ம்.ம்.ம்.
3


உணவுப் பிரச்சினையைப் பற்றிக் கூடப் பேசப் போகிறேன். நீங்கள் வந்து தான் ஆகணும்.
எக்ஸ்க்யூஸ் மீ!.... மன்னிச்சுடுங்க!
4


சரி, அப்படியானால் நாளைக்குச் செய்யப் போகிற பிரசங்கத்தை இன்றைக்கே படித்துக் காட்டி விடுகிறேன்!
??!
5


அவ்வளவு சிரமம் வேண்டாம்! நாளைக்கு நான் கட்டாயம் பிரசங்கத்துக்கு வந்து விடுகிறேன்! நமஸ்காரம்!
6

# நாதஸ்வர ராஜாவின்

# அபூர்வ நாதஸ்வர ரிகார்டுகள்!

**N 18961**

ஜன கண மன

வாழுவோமே

**N.18952**

ரகுபதி ராகவ ராஜா ராம்

வைஷ்ணவ ஜன தோ

**N.18945**

ரக்ஷ பெட்டரே

2 பாகங்கள் — (பைரவி)

**N.18956**

ராதா ஸமேதா

முருகன்

**N.18946**

பூர்விகல்யாணி

2 பாகங்கள்

**N.18941**

மனோலயம்

நாட்டுப் பாட்டு

திருவெண்காடு

## சுப்பிரமணிய பிள்ளை




## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்

கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி

# ராதையின் கடிதம்

கி. மு.

அம்மா :

வாரம் தவறாமல் கடிதம் எழுதிக் கொண்டிருந்த என் பெண் திடீரென்று மூன்று மாதமாகக் கடிதமே எழுதாமலிருந்தால் என் மனம் எப்படியிருக்கும்? அவளுடைய அப்பாவுக்கு இதைப் பற்றியெல்லாம் என்ன கவலை? அவருண்டு, அவரது புத்தகக் கட்டுண்டு என்றிருப்பார். அதிசயமாக இன்று தபால்காரன் ஒரு கவரைக் கொண்டுவந்து கொடுத்தபோதும் அவர் தம் காரியத்தின் மேலேதான் குறியாக இருந்தார். எனக்குத்தான் அவசரம் தாங்கவில்லை. உறையைப் பிரித்துப் படித்துப் பார்த்தபோது என் தாயுள்ளம் பெருமித மடைந்தது.

ஆனால் பைத்தியக்காரப் பெண்! அவள் தன் கணவனுக்கு எழுதிய கடிதத்தை உறை மாற்றி வைத்துப் போட்டிருக்கிறாள். எப்படியானால் என்ன? இந்த மாதிரி ஒரு கடிதத்தை எழுதி அவசரத்தில் தவறுதலாகப் 'போஸ்டு' செய்ததால்தானே என் உள்ளம் குதூகலிக்கிறது?



க்ஷேமம்.

கடலூர்

தங்கள் ராதை அநேக கோடி நமஸ்காரம். ஒருவாரமாகத் தாங்க வில்லாமல் எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. தங்களைப் பிடித்த மன்னார்குடி எப்போதுதான் தங்களை விடுதலை செய்யப்போகிறது? ஊருக்குப் போகும்போது பிரமாதமாக அளந்து விட்டுப் போனீர்களே! 'நான்கு நாள்தான் தங்குவேன்: அந்த நான்கு நாட்களும் எனக்கு நான்கு யுகமாகத் தானிருக்கும்' — இன்னும் என்னவெல்லாமோ சொல்லிவிட்டுப் போனீர்களே! இன்னுமா அந்த நான்கு நாட்களாகவில்லை? ஏதோ காரியமாகப் போனாலும், உடனே திரும்பினோம் என்ற வழக்கமே உங்களிடம் கிடையாது.

இந்த ஒருவாரமாக எத்தனை தடவைகள்தாம் நான் இந்த வீட்டைச் சுற்றிச் சுற்றி வருவது? அடிக்கொருதரம்,

**கண்ணனென்று என்னைச் சொன்னாள்-ராதை**
**கைக்குழலின் இனிய ஒலியாவாள்**

என்னும் தங்கள் கேலிப்பாடல் இன்று இடுக்குகளில் விருந்தெல்லாம் முழுங்கிக் கொண்டிருக்கிறது!

இன்று விடியற்காலை ஒரு கனவு கண்டேன்! எழுதட்டுமா? பந்தயத்தில் தோற்றுப்போனது நீங்கள்தான் என்று கனவு கண்டேன். என் பிரியப்படியே எனக்கு ராஜாதான் பிறந்தான்—மூக்கும் விழியுமாகத் தங்களைப் போலவே! தாங்கள் பந்தயத்தில் தோற்றுவிட்டு அசட்டுப் பார்வையுடன் நின்றீர்கள்! வைகறைக் கனவு நிச்சயம் பலிக்கக் கூடியதுதானே?

அடேடே, மறந்து விட்டேனே — தாங்கள் ஊருக்குப் போனபின், கடிதத்திற்கு மேல் கடிதமாக அம்மா தினமொன்று வரைந்து தள்ளிக் கொண்டிருக்கிறாள் அவளுக்கும் பொழுது போக வேண்டுமோ இல்லையோ, அப்பா கச்சேரிக்குப் போனபின்? அவள் எழுதியிருப்பதற்கு என்ன பதில் எழுதுவது என்று எனக்கும் தெரியவில்லை. ஆனால், இந்த நான்கு மாதங்களுக்குப் பிறகு இன்றுதான் அவளுக்கும் எழுதியிருக்கிறேன்.

நீங்கள் என்னைக் கோபிக்கப் போகிறீர்கள், அவள் கேட்டிருக்கும் அசட்டுக் கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் சொல்ல வேண்டுமா என்று? 'இதை'த் தெரிந்து கொள்ளாமல் அவளுக்குத் தூக்கம் வரவில்லையாக்கும் என்பீர்கள். அவள் கேள்விக்கே நான் பதில் எழுதவில்லை. அந்தப் பைத்தியம் ஊரெல்லாம் சொல்லி அம்பலப்படுத்தும்! நீங்களும் கும்பகோணம் போய்விட்டு வரும்போது, — அங்கே போய் அசட்டுப் பிசட்டென்று ஏதாவது சொல்லி வைக்காதீர்கள்! என்ன, தெரிகிறதா?

வரும்போது, நல்ல கறுப்புப் பட்டில் அரக்கு பார்டருடன் புடவை ஒன்று எடுத்துக்கொண்டு வாருங்கள். கும்பகோணத்து வெற்றிலைக்காக என் நாக்கு

தவம் இடப்பதும் தங்களுக்கு ஞாபக மிருக்கும். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு உடனே கிளம்புகிறீர்களா? அந்த விஷயம் ஞாபக மிருக்கட்டும். அங்கேபோய் எங்கம்மாவுக்குத் தூபம் போட்டு விடாதீர்கள்! ஞாயிற்றுக் கிழமை காலை ஏழுமணி வண்டியில் இங்கு தங்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்; சரிதானே? அநேக கோடி நமஸ்காரம்.

தங்கள் ராதை.

இந்தக் கடிதத்தை சுமார் நூறு தடவை படித்திருப்பேன். இதற்குள் மணி இரண்டாகி விட்டது. எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. கதவை இழுத்துப் பூட்டி எதிர் வீட்டில் சாவியைக் கொடுத்து விட்டுக் கடைத்தெருவெல்லாம் ஒருதரம் சுற்றினேன். கருப்புப் பட்டில் அரக்கு பார்டர் ஜரிகைக் கரையுடன்—அவள் ஆசைப்படியே ஒன்று எடுத்துக்கொண்டு, என் ஆசைப்படியும் இரண்டொரு சங்கு வளையல்கள்—எல்லாம் வாங்கிக் கொண்டு திரும்பினேன். என்ன அதிசயம்! முன் புறத்து ஹாலில் மாமனாரும், மாப்பிள்ளையுமாக உட்கார்ந்துகொண்டு அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தார்கள்!

அவளைப் பற்றிய 'அதை' அவரிடம் கேட்க வேண்டுமென்ற எண்ணமே எனக்கில்லை. இந்தக் கடிதம் என் கைக்கு வந்த பின்னர் அதைப் பற்றிக் கேட்க எனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?

இரவு சாப்பாடெல்லாம் ஆன பிறகு நானும் இரேழிப்புறம் போய் அவர்களது சம்பாஷணையைச் சற்றுக் கேட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுதுதான் கூடத்துப் பக்கத்திலிருந்து 'கம்' மென்ற வாசனை என்னைக் கவர்ந்தது. திரும்பி வந்து பெஞ்சியை நோக்கினேன். அதன் மேலிருந்த பிரயாணப் பைக்குள் அப்பொழுது தான் மலர்ந்திருந்த முல்லையரும்பு, வெற்றிலை எல்லா மிருந்தன. என் மனதில் புல்லரித்துக் கொண்டிருந்த அந்த ஆசையையும் அவர் ரயிலுக்குக் கிளம்புவதற்குள் முடித்துவிட வேண்டுமென்று துடித்தது.

பேனாவையும், காகிதத்தையும் எடுத்து வைத்துக் கொண்டு, என்னமோ எழுதினேன் அந்த சந்தர்ப்பத்தில்! சாயங்கிரம் வாங்கி வந்திருந்த பட்டுப் புடவைக்குள் இதையும் வைத்துச் சுருட்டி விட்டு அதை அவரது பைக்குள் அடியில் வைத்துத் திணித்து விட்டு ஒன்றும் அறியாதவன் போல் இரேழிப் பக்கம் வந்தேன். என் தாயுள்ளம் எங்கேயோ வெல்லாம் இன்ப லாகிரியுடன் ஆனந்த ராகம் இசைத்துக் கொண்டிருந்தது!

**கோபாலன்:**

நான் உத்தியோக காரியமாக வெளியூர் வந்து நான்கு நாட்கள் அதிகமாகத் தான் ஆகி விட்டது. இருக்கட்டும், அதற்காக இந்தப் பைத்தியம் நிலைமொரு கடிதமா எழுதுவாள்? அது தான் போகட்டும்—செய்ததைத்தான் சரியாகச் செய்தாளா? மேல் விலாசம் நீங்கலாகக் கடிதம் எனக்கில்லை! அவள் அம்மாவுக்காக எழுதிய கடிதத்தை எனக்கு அனுப்பியிருக்கிறாள்.

நானும் ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும் தருணத்தில் இந்த மாதிரி ஒரு கடிதம் வந்தால் நான் என்ன செய்வது?

இங்கே கும்பகோணம் வந்த பிறகும் ஒருவர் கண்ணிலும் படாமல் தப்பிக்கவேண்டுமே யென்று தான் நினைத்துக்கொண்டிருந்தேன். கடைத் தெருவில் இவன் அப்பா வந்து நிற்பார் என்று எனக்கு ஜோசியமா தெரியும்? அதன் பின்னர் என்ன செய்வது? அந்த மூன்று மணி நேரமும் எனக்கு மூன்று யுகமாகத்தா னிருந்தது. அவர் ஏதோ கேட்டார் 'அவளை'ப் பற்றி. நான் அசடு வழிய 'இல்லை' யென்ற காட்சியைப் பார்க்க அவள் அம்மா அங்கு இல்லை! மெதுவாக 'போட் மெயி'லில் ஏறிய பின்னர்தான் என் சுவாசம் என்னிடம் திரும்பிற்று!

**ராதை:**

நான் எழுதியிருந்தபடியே காலை ஏழுமணி வண்டிக்கு 'அவர்' வந்து விட்டதில் எனக்கு அசாத்திய மகிழ்ச்சி. அவர் முகத்திலிருந்த அசட்டுக் களை மாத்திரம் எனக்கென்னவோ புதிராக இருந்தது. அவரது மூட்டையைப் பிரித்தபோது தான் எனக்கு அது விளங்

கிற்று. அவர் சொல்லி வந்த விருத்தாந்தம் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அவருக்குக் கிடைக்காத கடிதம்—அம்மாவின் கையில் கிடைத்திருக்கிறது. பைக்குள்ளிருந்த பட்டுப் புடவை அவர் வைக்காமல் எப்படி அதில் வந்தது? அதற்குள் இன்னும் ஏதேதோ-எனக்குப் பிடித்தமான வளையல்கள்—கடிதத்துடனிருந்தன. அவரும் கூடவே இருந்ததை என்னால் சகிக்க முடியவில்லை. சமையலறைக்குள் ஓடிச்சென்று நான் பிரித்துப் பார்த்தபோது தான் என் அசட்டுத்தனம் பூராவும் தெரிந்தது. அம்மா எனக்கு ஒரு கடிதம் எழுதி அதற்குள் வைத்திருக்கிறாள்!

க்ஷேமம். கும்பகோணம்

சௌ. ராதைக்கு அம்மாவின் ஆசீர்வாதங்கள்.

ஏ பைத்தியம்! நான் கேட்டிருந்ததற்கு மூன்று மாதமாகப் பதில் எழுதாமலிருந்தாய். தெய்வமாகப் பார்த்து அதை எனக்குத் தெரிவித்து விட்டது. நீ உன் கணவனுக்காக எழுதிய கடிதத்தை இத்துடன் ஆயிரம் தடவை படித்து விட்டேன்! நீ இந்தக் கடிதத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் தருணமெல்லாம் நான் உன் அப்பாவுடன் உன்னை அழைத்துவர நான் வைத்துக் கொண்டிருப்பேன் என்பதை எண்ணிக்கொள். என்னிடம் நீ இதைத் தெரிவித்தால் என்ன? உன் கௌரவத்தைக் குலைத்தா விடுவேன்? போதும் போதாதற்கு அந்த மனுஷ்யனுக்குமல்லவா கட்டுமானம் செய்திருக்கிறாய்? பயப்படாதே—நான் அவரைக் கேட்கவேயில்லை. நீ எழுதியிருக்கிறபடி எனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது 'அதைக் கேட்க? கூடிய சீக்கிரம் ஏற்பாடு செய்து கொண்டு உன் அப்பாவுடன் அவ்விடம் வருகிறேன். இந்தக் கடிதமும் இதனுடனிருப்பவைகளும் வைத்தது உன் கணவருக்குத் தெரியாது. உனக்கு இன்னும் என்னென்ன வேண்டுமோ, அதையெல்லாம் மரியாதையாக இப்பொழுதே எழுதிவிடு. அப்புறம், நாளைக்கு என் பேரன் பிறந்தால் உன்னை அணுவளவும் கவனிக்க மாட்டேன் என்பதைத் தெரிந்துகொள். ஆசீர்வாதங்கள்.

உன் பைத்தியக்கார அம்மா.

நான் இதைப் படித்துக் கொண்டிருக்கும் போதே பூனை போல் அவர் என் பின்னால் வந்து நின்றதை நான் கவனிக்கவில்லை. அவருடைய கலகலத்த சிரிப்பு என் உடலைச் சிலிர்க்க வைத்து விட்டது. வழக்கம் போல அவரது குரல் கேலி செய்ய ஆரம்பித்து விட்டது!

**கண்ணனென்று என்னைச் சொன்னால்-ராதை**
**கைக்குழலின் இனிய ஒலியாவாள்.**

# அங்கேயும் பேசினேன்!









## 4. சாந்திநிகேதனம்

இராஜகோட்டையிலிருந்து காந்திஜி ஸ்ரீ ரவீந்திர நாதரின் சாந்திநிகேதனத்துக்குச் சென்றார். ஏற்கெனவே அவ்விடத்துக்குப் போனிக்ஸ் பண்ணையில் வசித்தவர்கள் போயிருந்தார்கள். அவர்கள் சாந்திநிகேதனத்தில் மிக அன்பாக நடத்தப்பட்டு வந்தார்கள். அவர்களுக்குத் தனியாக இடம் கொடுக்கப் பட்டிருந்தது. அவர்களுக்குத் தலைவர் ஸ்ரீ மகன்லால் காந்தி. இவர் சாந்திநிகேதனத்திலும் போனிக்ஸ் ஆசிரமத்தில் நடத்திய வாழ்க்கை முறையையே தாமும் கடைப்பிடித்து மற்றவர்களையும் கடைப்பிடிக்கும்படி செய்து வந்தார்.

காந்திஜி சாந்திநிகேதனம் அடைந்ததும் அவரை அங்கிருந்த ஆசிரியர்கள் மாணாக்கர்கள் எல்லாருமே அன்பு வெள்ளத்தில் மூழ்கும்படி செய்தார்கள். தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்த ஆண்ட்ரூஸும் பியர்ஸனும் அப்போது அங்கே இருந்தார்கள். இவர்கள் தவிர, பரோடா கங்காநாத் வித்யாலயத்திலிருந்து சாந்திநிகேதனத்துக்கு வந்திருந்த காகாசாஹிப் காலேல்கர் என்பவரைக் காந்திஜி இங்கே சந்தித்தார். பிற்காலத்தில் காகா சாஹிப் காந்திஜியின் சிறந்த நண்பர்களில் ஒருவர் ஆனார்.

சாந்திநிகேதனத்தை அடைந்த காந்திஜி வெகு சீக்கிரத்திலேயே அங்கிருந்த ஆசிரியர்கள் — மாணாக்கர்கள் எல்லாருடனும் சிநேகம் செய்து கொண்டார். மறுநாளே அவர்களுடன் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி விவாதம் செய்ய ஆரம்பித்தார். போனிக்ஸ் ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவைத் தாங்களே சமையல் செய்து கொண்டார்கள். அது மாதிரியே சாந்திநிகேதன மாணாக்கர்களும் சமையற்காரர்களைப் போகச்சொல்லிவிட்டுத் தாங்களே சமையல் செய்து கொண்டால் என்ன என்று மகாத்மா கேட்டார். இதனால் பிள்ளைகளுக்குத் தேக திடமும் மனோ திடமும் வளரும் என்று சொன்னார். இது சம்பந்தமாக ஆசிரியர்களுக்குள்ளே இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. ஒரு கட்சியார் மகாத்மாவின் யோசனையை ஆதரித்தார்கள். இன்னொரு கட்சியார் அது நடக்காத காரியம் என்று தலையை அசைத்தார்கள்.

காந்திஜியின் யோசனை மாணாக்கர்களுக்குப் பிடித்திருந்தது. புதுமையான காரியம் என்றாலே பிள்ளைகள் விரும்புவது இயல்பு அல்லவா? மகா கவி ரவீந்திரரிடம் போய்ச் சொன்னார்கள். உபாத்தியாயர்களும் மாணாக்கர்களும் சம்மதித்தால் தமக்கு ஆட்சேபம் இல்லை என்று குருதேவர் சொன்னார். மாணாக்கர்களைப் பார்த்து "சுயராஜ்யத்தின் திறவுகோல் இந்தச் சோதனையில் அடங்கியிருக்கிறது!" என்று கூறினார்.

பின்னர் சாந்திநிகேதனத்தில் ஆசிரியர்க ளின் மேற்பார்வையில் மாணாக்கர்களே சமை யல் செய்யும் சோதனை சிலகாலம் நடந்தது. கூட்டம் கூட்டமாகப் பிரிந்து ஒவ்வொரு வேலையும் ஒவ்வொரு கூட்டத்தாரிடம் ஒ படைக்கப்பட்டது. பியர்ஸன் என்னும் ஆ கிலேய அறிஞர் இந்தப் பரிசோதனையி பூரண உற்சாகத்துடன் ஈடுபட்டார். த உடல் நலத்தைக் கூடப் பொருட்படுத்தாம அவர் சமையல் அறையில் வேலை செய்தா சமையல் அறையையும் சுற்றுப்புறங்களையு சுத்தம் செய்யும் வேலையை ஆசிரியர்க சிலர் ஒப்புக்கொண்டிருந்தார்கள். எம். பட்டம் பெற்ற ஆசிரியர்கள் கையி மண்வெட்டி பிடித்து வேலை செய்வதை

பார்க்க மகாத்மா காந்திக்கு மிகவும் சந்தோஷமா யிருந்தது.

ஆனால் சாந்திநிகேதனத்தில் இந்தச் சோதனை சிலகாலந்தான் நடந்தது. சோதனையில் ஈடுபட்டவர்கள் கொஞ்ச காலத்துக்கெல்லாம் களைப்படைந்து போனார்கள். பியர்ஸன் முதலிய சிலர் மட்டும் இறுதிவரை அந்தச் சோதனையை விடாமல் நடத்தி வந்தார்கள்.

காந்தி மகாத்மா சிலகாலம் சாந்திநிகேதனத்தில் தங்கியிருக்கலாம் என்ற எண்ணத்துடன் வந்திருந்தார். ஆனால் இறைவனுடைய விருப்பம் வேறுவிதமா யிருந்தது. ஒரு வாரத்திற்குள்ளே ஸ்ரீ கோகலே மரணமடைந்தார் என்னும் செய்தி வந்து காந்திஜியின் உள்ளத்தைக் கலக்கியது. சாந்திநிகேதனம் துயரத்தில் மூழ்கியது. மகாத்மா காந்தி தமது பத்தினியையும் ஸ்ரீ மகன்லால் காந்தியையும் அழைத்துக் கொண்டு பூனாவுக்குப் பிரயாணமானார்.

இந்தப் பிரயாணத்தின் போதும் காந்திஜி மூன்றாம் வகுப்புப் பிரயாணத்தில் உள்ள கஷ்டங்களை அநுபவித்து அறியும்படியாக நேர்ந்தது. இது சம்பந்தமாக மகாத்மா காந்தி எழுதியிருப்பதாவது :—

"மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் டிக்கட் வாங்குவதில்கூட எவ்வளவு கஷ்டங்களுக்கு உள்ளாகவேண்டி யிருக்கிறதென்பதை பர்த்வானில் அநுபவித்து அறிந்தோம். 'மூன்றாம் வகுப்பு டிக்கட்டுகள் இதற்குள் தரமுடியாது' என்று முதலில் சொன்னார்கள். அதன்மீது நான் ஸ்டேஷன் மாஸ்டரைக் காணச் சென்றேன். அவரைக் கண்டு பிடிப்பதே கஷ்டமாயிருந்தது. யாரோ ஒருவர் தயவு வைத்து அவர் இருக்குமிடத்தைத் தெரிவித்தார். அவரிடம் சென்று எங்களுடைய கஷ்டத்தை எடுத்துக் கூறினோம். அவரும் அதே பதிலையே தெரிவித்தார். ஆகவே காத்திருந்து டிக்கட் ஜன்னல் திறந்ததும் சென்றேன். ஆனால் டிக்கட் வாங்குதல் எளிய காரியமாயில்லை. அங்கு வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்னும் சட்டம் அமுலில் இருந்தது. மற்றவர்கள் எக்கேடு கெட்டாலும் கெட்டும் என்று எண்ணிய பலசாலிகளான பிரயாணிகள் ஒருவர் பின் ஒருவராய் வந்து என்னை இடித்துத் தள்ளிக்கொண்டே யிருந்தார்கள். ஆகவே முதலில் டிக்கட் வாங்குவதற்குப் போனவனாகிய நான் ஏறக்குறையக் கடைசியில்தான் டிக்கட் பெற முடிந்தது.



பிள்ளை :—அம்மா! டாக்டர் உன் மருமகள் சமையல் செய்யக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்.

அம்மா :—ஏண்டா, அப்பா! அவளுக்கு உடம்புக்கு என்ன?

பிள்ளை :—அவளுக்கு உடம்பு ஒன்றுமில்லை, அம்மா! எனக்குத்தான் இரண்டு நாளாக வயிற்றுக் கோளாறு!

---

வண்டி வந்து சேர்ந்தது. அதில் ஏறுதல் மற்றொரு பிரம்மப் பிரயத்தனமாயிற்று. வண்டியில் ஏற்கெனவே இருந்த பிரயாணிகளுக்கும், ஏற முயற்சித்த பிரயாணிகளுக்கும் இடையே வசைமொழிகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. ஒருவரை யொருவர் பிடித்துத் தள்ளலும் நிகழ்ந்தது. பிளாட்பாரத்தில் மேலும் கீழும் ஓடி அலைந்தோம். 'இங்கு இடமில்லை' என்னும் ஒரு பதிலே எங்கும் கிடைத்தது. கார்டிடம் சென்று சொன்னேன். அவர் 'அகப்பட்ட இடத்தில் உள்ளே ஏற முயற்சி செய்யும்; இல்லாவிடில் அடுத்த வண்டியில் வாரும்' என்றார்.

மூன்றாம் வகுப்பு ரயில்வே பிரயாணிகளின் துயரங்களுக்கு ரயில்வே அதிகாரிகளின் யதேச்சாதிகாரமே காரணம் என்பதில் ஐயமில்லை. ஆனால் பிரயாணிகளின் முரட்டு சுபாவம், ஆபாச வழக்கங்கள், சுயநலம், அறியாமை முதலியவைகள் அத்துயரங்களை அதிகப்படுத்துகின்றன. இதில் பரிதாபமான விஷயம் யாதெனில், தாங்கள் தவறுதலாகவும், ஆபாசமாகவும், சுயநலத்துடனும் நடந்து கொள்கிறோமென்பதே

அவர்களுக்குத் தெரியவில்லை. தாங்கள் செய்வதெல்லாம் இயற்கையே என்று அவர்கள் கருதினார்கள். இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் அவர்கள் விஷயத்தில் படித்தவர்களாகிய நாம் காட்டும் அலட்சியமே என்று கூறலாம்.”

* * *

மகாத்மா காந்தி பூனா வந்து சேர்ந்து கோகலேயின் சிராத்த காரியங்கள் எல்லாம் நிறைவேறிய பிறகு, இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்வது பற்றி மற்றும் ஒரு முறை சிந்தனை செய்தார். கோகலேயைக் குரு பீடத்தில் வைத்து மகாத்மா அவரிடம் பக்தி செலுத்தியவர். இப்போது கோகலே காலமாகி விட்டபடியினால் அவர் ஸ்தாபித்த சங்கத்தில் சேர்ந்து அவர் ஆரம்பித்து வைத்த பணிகளை நிறைவேற்றுவது தமது கடமை என்று கருதினார். மீண்டும் இந்திய ஊழியர் சங்கத்தின் அங்கத்தினரிடம் தமது விருப்பத்தைத் தெரிவித்தார். முன் போலவே அந்த அங்கத்தினர்களுக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. சிலர் மகாத்மாவைச் சேர்த்துக் கொள்ளலாம் என்றார்கள். சிலர் கூடாது என்றார்கள். மகாத்மாவைச் சேர்த்துக் கொள்வதை எதிர்த்தவர்கள் இந்திய ஊழியர் சங்கத்தின் இலட்சியங்கள்—கொள்கைகளுக்கும் மகாத்மாவின் இலட்சியங்கள்—கொள்கைகளுக்கும் அடிப்படையான வேற்றுமைகள் இருப்பதைச் சுட்டிக் காட்டினார்கள். கொஞ்ச காலத்துக்குப் பிறகு இந்திய ஊழியர் சங்க அங்கத்தினர் கூட்டம் நடத்தி அதில் பெரும்பான்மை அபிப்பிராயத்தின்படி முடிவு செய்யலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.



“என் பாட்டி, உங்கள் பிள்ளை ரேடியோ வாங்கியிருக்காராமே? என்ன மாடல் என்று தெரியுமா?”

“எல்லாம் இந்த மாதிரி பாட்டுப் பாடுகிற மாடல்தான்!”

மகாத்மா இதை விரும்பவில்லை. தாம் இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்வதற்கு ஒரு சிலர் விரோதமாயிருந்தாலும் அதில் சேர மகாத்மா இஷ்டப்படவில்லை. சிலருக்கு விரோதமாகப் பெரும்பான்மை வோட்டுப் பெற்று ஒரு ஸ்தாபனத்தில் சேர்வதில் என்ன நன்மை ஏற்படமுடியும்? கோகலேயிடம் தாம் வைத்திருந்த பக்திக்கு அது உகந்ததாகுமா?—இப்படி யோசித்துக் கடைசியாக மகாத்மா தமது விண்ணப்பத்தை வாபஸ் வாங்கிக்கொண்டார்.

இதன் காரணமாக இந்தியா தேசம் அடைந்த நன்மைக்கு அளவே கிடையாது என்று சொல்லலாம். தாம் மேற்படி சங்கத்தில் சேராததே நல்லது என்றும் தாம் சங்கத்தில் சேர்வதை எதிர்த்தவர்களே தமக்கு நன்மை செய்தவர்கள் என்றும் பிற்காலத்தில் காந்திஜீ கருதினார்.

மேற்கண்டவாறு விண்ணப்பத்தை வாபஸ் பெற்றுக் கொண்டதினால் சங்கத்தின் அங்கத்தினருடன் மகாத்மா காந்தியின் சிநேக பாத்தியம் வளர்ந்து நீடித்திருந்தது.

## விசித்திரம்!

தஞ்சை சரஸ்வதி மகாலில் உள்ள அதிசயமான சித்திரப் புத்தகம் ஒன்றைக் குறித்து மார்ச்சு 27உ “கல்கி” இதழில் எழுதியிருந்தது. அந்தப் புத்தகத்திலிருந்து, கழுகுக்கும் மனிதனுக்கும் உள்ள முக ஒற்றுமையைக் குறிப்பிடும் சித்திரம் வெளியிடப்பட்டிருந்தது. இந்த இதழில் அதே புத்தகத்திலிருந்து போட்டோ பிடித்த இன்னும் இரண்டு சித்திரங்களை வெளியிடுகிறோம். ஒன்று சிங்க முகத்துக்கும் மனிதன் முகத்துக்கும் உள்ள ஒற்றுமையைக் காட்டுகிறது. இன்னொரு படம், மனிதர்களை ‘ஆடுகளின் கூட்டம்’ என்று சொல்வதில் பொருத்தம் இருப்பதை எடுத்துக் காட்டுகிறது.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 248. ஆங்காரத்தில்ச் சிரிப்பு!

ராவணன் நெடுகிலும் மகா வீரனாய், கலைகளுக்கெல்லாம் உறைவிடமாய், பிரஜைகளைச் சிரத்தையோடு பாதுகாப்பவனாய் எல்லாவற்றையும் விட மகா பக்திமானாய் இருந்து வந்தான். சீதா தேவியைக் கொண்டு வந்து அசோக வனத்தில் சிறையில் வைக்கும் வரை அவ்வாறெல்லாம் இருந்தான்.

அது காரணமாக விபீஷணன், தன் அண்ணன் மீது அபாரமான மரியாதையும் அன்பும் பக்தியுமே உடையவனாய் இருந்தான்.

அண்ணனைப் பார்த்து மிக்க பக்தியுடனேயே பேசுகிறான் விபீஷணன்.

'எந்தைநீ ஆயும்நீ,
எம்முன் நீ,தனி
வந்தஎம் தெய்வம்நீ,
மற்று முற்றும்நீ !—
இந்திரப் பெரும்பதம்
இழக்கின் றுய்எனா
நொந்தனன் ஆதலின்
நுவல்வ தாயினேன்.'

[எந்தை நீ ஆயும் நீ எம் முன் நீ: அப்பன், அம்மை, அண்ணன் எல்லாம் நீதான் எனக்கு; தனி வந்த எம் தெய்வம் நீ: எங்களுக்கென்றே பிரத்தியேகமாக அவதரித்த எங்கள் தெய்வமும் நீதான்; நொந்தனன் ஆதலின்: மனம் நொந்துபோய் விட்டது எனக்கு ஆனதினால்தான் பேசுகிறேன்.]

குறிப்பு:—விபீஷணனது உள்ளத்தின் தொனி செய்யுளில் அழகாய் ஒலிக்கிறது; ஏதோ முகஸ்துதியாகச் சொன்ன சொல் அல்ல.

* * *

இந்தத் தலைநகர் வெந்து போய் விட்டது; உன்னுடைய பராக்கிரமமும் வெந்து போய் விட்டது. ஏன் வெந்து போய் விட்டது?

கோநகர் முழுவதும்,
நினது கொற்றமும்,
சானகி எனும்பெயர்
உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால்
வெந்த(து): அல்ல(து)ஓர்
வானரஞ் சுட்டதென்(று)
உணர்தல் மாட்டியா ?'

[கோ நகர்: இலங்கை; கொற்றம்: வீரத்துக்கான புகழ்; சானகி எனும் பெயர் உலகின் தம்மனை ஆனவள்: சானகி எனும் பெயர் கொண்ட உலகத்துக்கே மாதாவாய் உள்ள அந்தத் தெய்வத்தின்; கற்பினால் வெந்தது: கற்பின் சக்தியால் வெந்தது.]

* * *

“ஆகையால் சீதா தேவியைத் தயவுசெய்து ராமனிடம் கொண்டு

---

## ஏன் தரவில்லை ?



மனைவி:—டாக்டர் மருந்து மாத்திரம்தான் கொடுத்தாரா? சீட்டு ஒன்றும் கொடுக்கவில்லையா?

புருஷன்:—இப்போது கொடுக்கவில்லை; கடைசியிலே சீட்டுத் தருகிறேன் என்று சொன்னார்!


















போய்ச் சேர்த்து விடு. அப்படிச் சேர்ப்பதுதான் நமக்கு வெற்றி" என்று விபீஷணன் சொன்னான்.

இதைக் கேட்டான் ராவணன். கையோடு கையை நெரித்தான். வாயிலுள்ள வளைந்த பல்லிலிருந்து ஒளி வந்தமாதிரி இருக்கிறது.

**சந்தம்**

தான தன்னன
தானன தானன
தா ன

கேட்ட ஆண்தகை
கரத்தொடு கரதலம்
கிடைப் பப்

பூட்டி, வாய்தொறும்
பிறைக்குலம் வெண்ணிலாப்
பொழி ய,

நாட்டம் தீஎழ,
நலம்திகழ் ஆரமும்
மார் பும்

தோள்த்த டங்களும்
குலுங்கநக்(கு) இவைஇவை
சொன் னான்.

[கேட்ட ஆண்தகை: விபீஷணன் சொன்னதைக் கேட்ட ராவணன்; கரத்தொடு கரதலம் கிடைப்பப் பூட்டி: கையோடு கையை இறுகச் சேர்த்து நெரித்து; வாய் தொறும் பிறைக் குலம்: பற்களிலிருந்து நிலாக் கதிர் வந்தது போலத் தோற்றம் அளிக்க; நாட்டம் தீ எழ: கண்ணிலிருந்து பொறி பறக்க; நலம் திகழ் ஆரமும் தோள்த் தடங்களும்: அழகிய ரத்ன ஆரங்களும் தோள்களும்; குலுங்க நக்கு: குலுங்கும்படியாக ஆங்காரச் சிரிப்புச் சிரித்து; இவை இவை சொன்னான்; பின் வருபவற்றைச் சொன்னான்.]

பெரிய பதவியில் உள்ளவர்களுக்கு, அந்தக் காலத்தில், பதவியின் தோரணையை எடுத்துக் கிரீடத்தில் செதுக்கிய முகங்களை எடுத்துக் காட்டுவதற்காக மூன்றோ, பத்தோ அமையும்படி செய்வார்கள். அப்படியே தோள்ப் படலங்களையும் செய்து அணிந்து கொள்ளுவார்கள். ஆகவே ராவணனுக்குக் கோபாவேசம் உண்டாய் விட்டதால் இயல்பான முகத்தில் காணும் கோபக் குறிகளை எல்லாம் கிரீடத்தில் செதுக்கிய முகங்களிலும் காண்பதாக ஒரு தோற்றம் தோன்றும். இது இயல்பான மயக்கக் காட்சி தான். தோள்ப் படலங்கள் எல்லாம் குலுங்குவதாகத் தோன்றியதும் பாவத்துக்கு ஒத்ததே!



# பகற்கொள்ளை

ராஜன்

ஆபீஸ் வேலைகளை முடித்துக்கொண்டு மாலை ஏழு மணிக்கு வீடு திரும்பினேன். வாசலில் என் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த என் மனைவி லக்ஷ்மி என்னைக் கண்டவுடன் ஒரு டம்ளரில் காப்பியைக் கொண்டுவந்து மேஜையின் மேல் வைத்துவிட்டுச் சமையல் அறையைப் பார்க்க நடந்தாள். டம்ளரை மேஜையின் மேல் வைத்ததில், ஒன்று டம்ளராவது நசுங்கியிருக்க வேண்டும், அல்லது மேஜையாவது கொஞ்சம் ஒடிந்திருக்கவேண்டும். என்மேல் லக்ஷ்மிக்கு அவ்வளவு கோபம்!

கோபம் வரக் காரணமில்லாமலில்லை. அன்று மாலை அவளை மவுண்ட் ரோட்டில் நடந்துகொண்டிருந்த 'பகற் கொள்ளை' என்ற சினிமாவிற்கு அழைத்துக்கொண்டு போவதாகச் சொல்லியிருந்தேன். லக்ஷ்மி ஒரு வாரமாகவே அந்தச் சினிமாவைப் பார்க்க வேண்டுமென்று என்னை நச்சரித்துக்கொண்டிருந்தாள். நானும் ஒரு வாரமாக அவளை அழைத்துக்கொண்டு போக எவ்வளவோ முயற்சிகள் செய்தேன். ஆபீஸில் வேலை ஒழிந்தால்தானே? நானோ ஒரு பாங்கியில் குமாஸ்தா. காலை எட்டு மணிக்குக் கணக்குப் புஸ்தகங்களைப் புரட்ட ஆரம்பித்தால் மாலை ஆறு மணி வரைக்கும் வேலை சரியாக இருக்கிறது. சில நாளைக்கு ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் கணக்கில் விட்டுப்போய்விடும். அன்று வீட்டுக்கு வர எட்டு அல்லது ஒன்பது மணி ஆனாலும் ஆகிவிடும்.

சோதனைபோல் அன்று ஆபீஸில் வேலை அதிகமாய் இருந்தது. கணக்குகளைச் சரிபார்ப்பதில் ஆழ்ந்திருந்த எனக்குச் சினிமாவிற்குப் போகவேண்டும் என்ற ஞாபகம் வரவில்லை.

வீட்டில் நான் தீபாவளிக்கு வாங்கிக் கொடுத்த பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு பிரமாதமாகச் சிங்காரம் செய்துகொண்டிருந்த லக்ஷ்மியைப் பார்த்த பிறகுதான் எனக்குச் சினிமா ஞாபகம் வந்தது.

மற்ற பெண்களைப்போல் சினிமாவிற்கு அழைத்துக்கொண்டுபோ, டிராமாவிற்கு அழைத்துக்கொண்டுபோ என்று லக்ஷ்மி என்னை ஒருநாள் கூடக் கேட்டதில்லை. ஆனால் அக்கம் பக்கத்திலுள்ளவர்களெல்லாம் 'பகற் கொள்ளை'யைப் பார்த்துவிட்டு லக்ஷ்மியையும் போய்ப் பார்த்துவிட்டு வரச் சொன்னார்கள். என் மனைவிக்கும் 'பகற்கொள்ளை'யில் நடக்கும் திடுக்கிடும் சம்பவங்களைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்ற ஆசை அதிகமாகி விட்டது. சினிமாவிற்கு ஒரு வாரமாகவே போக முயற்சி செய்தும் போக முடியவில்லை. அன்றைக்குத்தான் கடைசி நாள். எப்படியும் போய்ப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று லக்ஷ்மி நூறு தரம் சொல்லியும் நான் சாவகாசமாக ஆபீஸிலிருந்து வந்தால் அவளுக்குக் கோபம் வராமல் இருக்குமா?

* * *

காப்பியைச் சாப்பிட்டுவிட்டுச் சமாதானம் செய்யலாம் என்று சமையல் அறைப் பக்கம் போனேன். லக்ஷ்மி முகத்தை 'உர்'ரென்று வைத்துக்கொண்டு ஏதோ அவசரமாகக் காரியம் செய்கிறவள் போல் என்னைக் கவனிக்காமல் இங்கும் அங்கும் நடந்து கொண்டிருந்தாள்.

"லக்ஷ்மி, என்மேல் கோபித்துக் கொண்டு என்ன பிரயோசனம்? பிள்ளையாய்ப் பிறந்து பாங்கிற்கு உழைக்க வேண்டுமென்று என் தலையில் எழுதி விட்டான். இன்று நான் சீக்கிரமாகவே வரவேண்டுமென்று எவ்வளவோ அவசரப்பட்டேன். முடிந்தால்தானே? ஆபீஸர், நக்ஷத்ரகன்போல் ஆறு மணி வரைக்கும் உட்கார்ந்துகொண்டு என்னை வேலை வாங்கி விட்டான். என் பிழைப்பே இப்படியாகி விட்டது. என்ன செய்யலாம்?" என்று பேச்சை ஆரம்பித்தேன்.

"சாக்குப் போக்குகள் எதற்காகச் சொல்கிறீர்கள்? உங்களுக்கு அழைத்துக் கொண்டுபோக இஷ்டமில்லையென்று சொல்லுங்களேன்! போக வேண்டுமென்றால் ஒன்பது மணி ஆட்டத்திற்கு அழைத்துப் போக முடியாதா, என்ன?" என்றாள்.

"வீட்டை......" என்று இழுத்தேன்.

"அதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். தோட்டக்கார முனிசாமியை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லுகிறேன்" என்றாள்.

இவ்வளவு பிடிவாதமாக அவள் சினிமா பார்க்க வேண்டுமென்று சொல்கிற பொழுது நான் என்ன செய்ய முடியும்? முனிசாமியை வீட்டுக்குக் காவல் வைத்து

விட்டு நாங்கள் புறப்பட்டோம். நாங்கள் வீட்டை விட்டுப் புறப்படும்போதே மணி எட்டரை ஆகிவிட்டது. தெருக்கோடியில் ஒரு டாக்ஸி நின்று கொண்டிருந்தது. அதில் போகலாம் என்றேன்.

''எதற்காக டாக்ஸி? பஸ்ஸிலேயே போகலாம்'' என்று பஸ் ஸ்டாண்டைப் பார்க்க நடந்தாள். பஸ்ஸுக்காக அரை மணி காத்துக் கொண்டிருந்து, பஸ் கிடைத்து நாங்கள் மவுண்ட் ரோட் போய்ச் சேர்ந்த பொழுது மணி ஒன்பதரை ஆகி விட்டது.

''சினிமா ஆரம்பித்து விட்டிருப்பார்களோ?'' என்றாள் லக்ஷ்மி.

''அதிகநேரம் ஆகியிராது. ஆரம்பித்து அரைமணி தான் ஆகி இருக்கும்'' என்றேன் எரிச்சலுடன்.

டிக்கட்டுக்காக மணி பர்ஸிலிருந்து பணத்தை எடுத்துக் கொண்டு கொட்டகைக்குப் போன பொழுது 'இன்றைக்கு விடுமுறை' என்ற பெரிய போர்டு அங்கே தொங்கிக் கொண்டிருந்தது. லக்ஷ்மிக்குச் சினிமா பார்க்கவில்லையே என்று வருத்தம். ''நீங்கள் நல்ல மனதுடன் அழைத்துக்கொண்டு வந்திருந்தால் எல்லாம் நன்றாக நடந்திருக்கும்; இல்லாவிட்டால் எல்லாக் காரியங்களும் இப்படித்தான் நடக்கும்'' என்று அவளுடைய ஆத்திரத்தை என்மேல் காட்டினாள்.

''என் மேல் எதற்காக எரிந்து விழுகிறாய்? சினிமாவிற்குப் போகவேண்டும் என்று ஒரு வாரமாகத் துடித்துக் கொண்டிருந்தவள், இன்றைக்கு ஆட்டம் உண்டா இல்லையா என்று தெரிந்து கொண்டிருக்க வேண்டாமோ?'' என்று அவளுக்குமேல் நான் கத்தினேன்.



சிறிது நேரம் இருவரும் ஒன்றும் தோன்றாமல் நின்று கொண்டிருந்தோம். வேறு சினிமாவிற்குப் போவதற்கும் மணியாகி விட்டது. கடைசியில் ரிக்ஷா வைத்துக் கொண்டு வீட்டைப் பார்க்கப் புறப்பட்டோம். தெருக்கோடியில் வரும்பொழுதே வீட்டு வாசலில் ஒரு டாக்ஸி நின்று கொண்டிருந்தது தெரிந்தது. நாங்கள் சினிமாவிற்குப் புறப்பட்ட பொழுது தெருக்கோடியில் நின்றுகொண்டிருந்த அதே டாக்ஸிதான் என் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தது. டாக்ஸியில் ஒருவரையும் காணோம். எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. லக்ஷ்மியை ரிக்ஷாவில் இருக்கச் சொல்லிவிட்டுத் தோட்டத்தைத் தாண்டி வீட்டுக்குள் போனேன். உள்ளே விளக்கு எரிந்து கொண்டிருந்தது. வாசற்கதவைப் பூட்டியிருந்த பூட்டையும் காணவில்லை; முனிசாமியையும் காணவில்லை. கதவு உள்பக்கம் தாழ்ப்பாள் போடப்பட்டிருந்தது.

சத்தம் செய்யாமல் அக்கம்பக்கத்திலுள்ளவர்களைக் கூப்பிட்டுக் கொண்டு வந்து கலாட்டா செய்து கதவைத் திறக்கச் செய்தோம். உள்ளே நாகரிகமாய் உடை அணிந்து கொண்டிருந்த இரண்டு திருடர்கள் லக்ஷ்மியின் பட்டுப் புடவைகளையும் வெள்ளிப் பாத்திரங்களையும் மூட்டை கட்டி வைத்திருந்ததைப் பார்த்தோம். போலீஸ்காரர்களை வரவழைத்துத் திருடர்களை ஒப்படைத்தோம். வாசலில் முனிசாமி படுப்பதற்காகப் போட்டிருந்த பாயும் தலையணையும் அப்படியே இருந்தது. ஆனால் முனிசாமியைப் பற்றி ஒரு விதத் தகவலும் தெரியவில்லை. எனக்கு ரொம்பவும் கவலையாக இருந்தது. இரவு ஒருமணிக்கு முனிசாமி வந்து சேர்ந்தான். அவனை அதட்டிக் கேட்டதில், எப்படியும் நாங்கள் சினிமா பார்த்து விட்டு வர இரண்டு மணியாவது ஆகும்; அதற்குள் உள்ளூரில் நடந்து கொண்டிருந்த ஒரு சினிமாவைப் பார்த்து விட்டு வரலாம் என்று போயிருந்த சமாசாரம் தெரிந்தது.

இந்த விஷயத்தைக் கேட்ட லக்ஷ்மி முனிசாமியை எரித்து விடுபவள் போல் பார்த்துவிட்டுப் புடவைகளையும்வெள்ளிப் பாத்திரங்களையும் பீரோவில் வைத்து பூட்டப்போனாள்.



'பகற் கொள்ளை' சினிமாவைப் பார்க்காவிட்டாலும் இராக் கொள்ளை நடக்காமல் தடுத்தோமே என்ற திருப்தியுடன் வீட்டை ஒரு முறை சுற்றிப் பார்த்து விட்டுப் படுக்கச் சென்றேன்.

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள்  நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல் பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், பில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.




# போனோமிண்ட்

## பேதி மிட்டாயிக்கு ஜே!

திவ்வியமான பார்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Pres
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392